# தொல்பொருள் ஆய்வும் பண்பாடும்

பேராசிரியர்
ம. இரா. தங்கமணி

செந்தில் பதிப்பகம்,
219/1, கோவிந்தராசபுரம், மணப்பாறை - 621 306.
திருச்சிராப்பள்ளி மாவட்டம்.

# தொல்பொருள் ஆய்வும் பண்பாடும்



பேராசிரியர்

ம. இரா. தங்கமணி

செந்தில் பதிப்பகம்,

219/1, கோவிந்தராசபுரம், மணப்பாறை - 621 306.

திருச்சிராப்பள்ளி மாவட்டம்.

First Edition - Feb. 2000

ARCHAEOLOGY and CULTURE

Prof. M. R. THANGAMANI



Copies Can also be had from

Prof. M.R. THANGAMANI,
Pandyar Nagar,
Chinnandankoil,
Karur - 639 001.

Pages : 136 + 8

Price : Rs. 45.00

Printed at

PASUPATHI PRINTERS,
C.A.K. Road, Karur - 1.
Phone : 62149




# வாழ்த்துரை



மோதி. **S. பட்டாபிராமன்,** பி.காம்.,

தலைவர்

**திருச்சி ஷராப் & ஜீவல்லர்ஸ்** அசோசியேஷன்

செயலர்

**U.D.V. மேனிலைப்பள்ளி,** திருச்சிராப்பள்ளி

பொருளாளர்

**U.D. காலேஜ்,** திருச்சிராப்பள்ளி.

உரிமையாளர்

**ஸ்வர்ண மஹால்,** திருச்சிராப்பள்ளி.

பாருக்குள்ளே நல்ல நாடு நம் பாரத நாடு. ஆம் உண்மைதான். காளிதாசன், கம்பன், இளங்கோ, திருவள்ளுவர் முதலான மாபெரும் கவிஞர்கள் தோன்றிய பூமி, இப்புனித பூமி. ஆண்டாண்டு காலமாக தர்மம், அஹிம்சை, சமய சகிப்புத்தன்மை, நேர்மை, உழைப்பு, இறையன்பு, வீரம், தன்னலமறுப்பு, தியாகம் முதலான அருங்குணங்கள் அடையப் பெற்ற நமது முன்னோர் பெருமைக்குரியவர்கள்; பாராட்டுக்குரியவர்கள். உலகம் மெச்ச

நாம் பண்டு வாழ்ந்தோம் என்பது வரலாறு. ஆன்மீகத் துறையில் பன்னாட்டு அளவில் நம் பாரதமே முன்னணியில் உள்ளது.

சரித்திரம் நம் உயிர்நாடி. சரித்திரப் பேராசிரியர் வரலாற்று வித்தகர் **ம. இராச சேகர தங்கமணி** அவர்கள் என் கல்லூரித் தோழர்; கெழுதகை நண்பர் படிப்பில் மட்டுமன்றி விளையாட்டுக்களிலும் பொதுநலத்தொண்டிலும் பேரார்வம் கொண்டவர். கல்லூரி நாட்களிலேயே இவர் என்.சி.சி.யிலும் சுறுசுறுப்புடன் பணியாற்றியவர். 1991 தொடங்கி இன்று வரை முதலாம் இராசேந்திரசோழன், பாண்டியர் வரலாறு,, ரஷ்ய வரலாறு முதலான பல அருமையான வரலாற்று நூல்களைப் படைத்து, தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள 'வாழ்வியல் களஞ்சியத்தில்' 200க்கும் மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகளை வழங்கிப் புகழ் பெற்றுள்ள இவர், இப்போது 'தொல்லியல் ஒரு பார்வை' என்னும் சிறுநூலைத் தமிழுலகிற்கு வழங்குகிறார். பண்டைத் தமிழரின் பழஞ்சிறப்பை உணர்த்தும் இந்நூல் புத்தக உலகின் புதுமையாகும்.

ஆய்வுத் திறனும் கடுமையான உழைப்பும் கொண்ட நண்பரவர்கள் மேலும் பல நூல்களை எழுதித் தமிழன்னைக்குச் சூட்ட வேண்டுமென்று இதயங்கனிந்து வாழ்த்துகிறேன். இவர் பல்லாண்டு நலமுடனும் வளமுடனும் வாழ இறைவனை வேண்டுகிறேன்.

அன்புடன்

**மோதி S. பட்டாபிராமன்**

# முன்னுரை

ஒரு நாட்டின் வரலாற்றினைத் தெளிவாக எழுதப்பயன்படும் சான்றுகளுள் தொல்லியலும் ஒன்று, தொல்லியல் என்னும் பெரும் பிரிவில் கல்வெட்டுகள், செப்பேடுகள், நாணயங்கள், அகழாய்வுகள், நுண்கலைகள் ஆகியன அடங்கும். நம் மூதாதையரின் பண்பாட்டுப் பெருமையை அறிந்து கொள்வதில் தொல்லியல் ஆய்வுகள் பெரும்பங்கு வகிக்கின்றன. கடந்த இருபதாண்டுகளில் தமிழ்நாட்டின் பல்வேறு இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளால் தமிழரின் தொன்மையும் சிறப்பும் விளக்கமடைந்துள்ளன.

கரூர், காவிரிப்பூம்பட்டிணம், அரிக்கமேடு, அழகன்குளம், வசுவ சமுத்திரம், முதலான இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளின் மூலம் உரோம், கிரேக்கம், சீனம், இத்தாலி, முதலான நாடுகளுடன் பழந்தமிழர் கொண்டிருந்த வணிக மற்றும் கலாச்சார உறவுகள் தெளிவாகின்றன. எனவே ஒவ்வொருவரும் தொல்லியல் பற்றி அறியவேண்டுவது அவசியமாகிறது.

இந்தியத் தொல்லியல்துறையின் சாதனைகள், அகழாய்வு நெறிமுறைகள், தமிழரின் கல்வெட்டுகள், நாணயங்கள், மட்பாண்டங்கள், தமிழக அகழாய்வுகளால் அறியப்படும் உண்மைகள் ☐ ஆகியவை பற்றி மாணவ மாணவியர் மட்டுமன்றி பொதுமக்களும் அறிந்து கொள்ளவேண்டுமென்ற ஆர்வத்தால் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

இருபதே நாட்களில் அவசரமாக எழுதப்பட்டுள்ள இந்நூல், தொல்லியலின் பெருமையை இரத்தினச் சுருக்கமாக

அறிஞர்களின் கட்டுரைகள் நூல்கள் தோன்றாத்துணையாய் விளங்கின. அவ்வறிஞர் பெருமக்கட்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

குறிப்பாக அதிலும் சிறப்பாக நாணயவியல் அறிஞர் ஆர். கிருஷ்ணமூர்த்தி, தொல்லியல் அறிஞர்களான நடனகாசிநாதன், ஆர். பூங்குன்றன், எ. ஏகாம்பரநாதன், அரங்க பொன்னுசாமி ஆகியோருக்கு என் இதயங்கனிந்த நன்றியை நவில்கின்றேன். ஒளிப்படங்களை அச்சிட அனுமதித்த தமிழ்நாடு தொல்லியில் துறையினர்க்கும் கட்டுரை ஆசிரியர்கட்டும் என் நன்றி. சில நாணயங்களின் படங்களைத் தந்து உதவிய கரூர் நாணயவியல் சேகரிப்பாளரும் ஓவியருமான வெ. இராஜி, நாணய சேகரிப்பாளர்கள் திருவாளர்கள் ச.இராமன், பேராசிரியர். P. திருஞானசம்பந்தம், அ.ஆறுமுகசீதாராமன் இந்நூல் சிறப்புற ஆலோசனைகள் வழங்கிய பேராசிரியர் பே. க. வேலாயுதம் ஆகிய நண்பர்களுக்கும் நன்றி.

இந்நூலுக்குச் சிறந்ததோர் அணிந்துரை நல்கிய திருச்சி தேசியக்கல்லூரியின் தாளாளர் மதிப்பிற்குரிய பெரியவர் திருமிகு. K. சந்தானம், அவர்கட்கும் வாழ்த்துரை வழங்கிய சுவார்ணமாளிகை அதிபர் திருமிகு. மோதி S. பட்டாபிராமன் அவர்கட்கும் என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மிகக்குறுகிய காலத்தில் இதனை அச்சிட்டுதவிய திருச்சி சக்தி பிரிண்டர்ஸ்க்கு நெஞ்சார்ந்த நன்றி. தொல்லியலைப் பாடமாகப் பயிலும் கல்லூரி மாணவ மாணவியர்களின் தேவை கருதி இந்நூல் எழுதப்பட்டுள்ளது. மாணவ உலகம் இதனை வரவேற்பர் என நம்புகிறேன்.

*- ம. இராசசேகர தங்கமணி*

# பொருளடக்கம்

# 1. பாரதத்தில் தொல்லியல் துறையின் வரலாறு

## (History of Indian Archaeology)

நம் பாரதத்தில் கி.பி. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் தான் தொல்லியலின் முக்கியத்துவம் உணரப்பட்டது. கி.பி. 1784 ஆம் ஆண்டு திரு. வில்லியம் ஜோன்ஸ் என்னும் அறிஞர் 'ஆசியக் கழகத்தை' (Asiatic Society) நிறுவி இந்தியாவின் கலை இலக்கியப் பெருமைகளை ஆய்ந்து வெளிப்படுத்தினார் 'ஆசியா பற்றிய ஆய்வு' (Asiatic Research) எனும் இதழில் இவ்வாய்வுக்கட்டுரைகள் வெளியிடப்பட்டன.

1980 ஆம் ஆண்டு ஜெனரல் கன்னிங் ஹாம் அவர்களது தலைமையில் இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத்துறை (Archaeological Suruey of India) மலர்ந்தது. இந்தியக் கல்வெட்டுக்கள், கலை, பண்பாடு, கோயில்கள், சிற்பங்கள் ஆகியவற்றை ஆய்ந்து வெளியிடுவது இத்துறையின் பணிகள் ஆகும் அப்போது இத்துறை மேற்பரப்புக்கள ஆய்வு (Exploration ) அகழாய்வு (Excavation) ஆகியவற்றில் பேரார்வம் காட்டவில்லை. 1899ஆம் ஆண்டு இத்துறை ஐம் பெரும் மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டு, கலைச் சின்னங்களைப் பாதுகாப்பதிலும் பழுதுபார்ப்பதிலும் முனைந்து செயல்பட்டது.

### கர்சான் பிரபுவின் பணி :

இந்தியத் தொல்லியல் துறை வரலாற்றில் இந்திய வைசிராயாகப் பணிபுரிந்த கர்சான் பிரபுவிற்குத்தனித்ததோர் இடமுண்டு. இத்துறையில் பேரார்வம் கொண்ட இவர் தொல்லியல் வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்டார். 1901இல் சர்ஜான் மார்ஷல் இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத்துறையின் தலைமை இயக்குநராகப் பதவியேற்றிதிலிருந்து, புதியதோர் சகாப்தம் தொடங்கியது. ஆரப்பா, மொகஞ்சதாரோ, பாடலிபுத்திரம், தட்சசீலம்,

சாரநாத், நாளந்தா முதலான இடங்களில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

ஜான் மார்ஷலுக்குப்பின் H ஹார்கிரீவ்ஸ் ராவ் பகதூர் தயாராம் சாஹ்னி, J F பிளாக்ஸ்டன், K N தீட்சித், ஆகியோர் இத்துறையின் தலைமை இயக்குநர்களாகப் பணிபுரிந்தனர். 1938ஆம் ஆண்டில் அயல் நாட்டிலிருந்து அழைக்கப்பட்ட லேணார்ட் ஊலி ( Leonard Woolley) எனும் அறிஞர் இந்தியத் தொல்லியல் துறை முன்னேறுவதற்கான பல பரிந்துரைகளை வழங்கினார். 1. கற்காலம் பற்றி ஆய்வு செய்யத்தனித்துறை ஒன்று நிறுவப்படவேண்டும் 2. கலைச்சின்னங்களும் அகழ்வில் கிடைத்த பழம் பொருட்களும் பாதுகாக்கப்பட அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும். 3. அகழ்வாய்வுகள் நவீன முறைப்படி மேற்கொள்ளப்பட வேண்டும் 4. இந்தியப் பரப்பாய்வுத்துறை மட்டுமின்றி பல்கலைக்கழகங்களும் தொல்லியல் ஆய்வில் நாட்டமுடைய அறிஞர்களைக் கொண்ட நிறுவனங்களும் ஆய்விலும், அகழாய்விலும், ஈடுபடலாம் என்பவையே அவற்றுள் குறிப்பிடத்தக்க பரிந்துரைகள் ஆகும்.

1944 ஆம் ஆண்டில் மார்டிமர் வீலர் அவர்கள் இத்துறையின் தலைமை இயக்குநராகப் பதவியேற்றபின், தொல்லியல் துறை புதுவலிவும் பொலிவும் பெற்றது. இவரது காலத்தில் இத்துறை மறுமலர்ச்சி பெற்றதுடன் நவீன முறையில் பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. பல்கலைக்கழக மாணவர் அகழாய்வுகளில் பங்குபெற வாய்ப்பு அளிக்கப்பட்டது, மண்ணடுக்குகளை வரையறை செய்தல், அகழ்வில் கிடைத்த பழம்பொருட்களையும் மட்பாண்டங்களையும் வகைப்படுத்தல், அவற்றின் காலத்தை வரையறை செய்து ஒப்பாய்தல் - ஆகிய நவீன முறைகள் புகுத்தப்பட்டன. கருநாடக மாநிலத்திலுள்ள பிரம்மகிரி என்னுமிடத்தில் சர்மார்டிமர் வீலர் அகழாய்வு செய்து பெருங்கற்

காலம் கி.பி 200 முதல் கி.பி.500 முடிய நிலவியது எனக் கண்டறிந்தார். 1945 ஆம் ஆண்டில் சர்மார்டிமர் வீலர் வரலாற்றுப் புகழ் மிக்க அரிக்க மேட்டில் (பாண்டிச்சேரி அருகே) உரோமானியக்குடியிருப்பை அகழ்ந்தெடுத்தார். தமிழக உரோமானியத் தொடர்பை உலகறியச் செய்தார். உயர்மட்டத் தொல்லியல் அலுவலர்களைக் கொண்ட 'மத்திய தொல்லியல் பரிந்துரைக்குழு' (Central Advisory Board of Archaeology) அகழாய்வின் முக்கியத்துவத்தையும் அகழாய்வு நடத்த அரசு அனுமதி வழங்குவது பற்றியும் அரசுக்கு அறிவுறுத்தியது

1950 ஆம் ஆண்டு நம்பாரதம் குடியரசு ஆன பின்னர் மாநிலங்கள் தோறும் தொல்லியல் துறைகள் ஏற்படுத்தப்பட்டன. சில பல்கலைககழகங்களிலும் தொல்லியல் துறை மலர்ந்தது. இவை அம்மாநிலத்திலுள்ள கலைச்செல்வங்களைப் பாதுகாத்ததுடன் கள ஆய்வுகளையும் அகழாய்வுகளையும் நடத்தின. மாணவர்கள் இவற்றில் ஈடுபட மத்திய, மாநிலத்தொல்லியல் துறைகள் உதவின.

தொல்லியல் ஆய்வுகளை ஆண்டு தோறும் வெளியிட மார்டிமர் வீலர் அவர்கள் தனி வெளியீட்டுப் பிரிவைத் தொடங்கினர். 1921 ஆம் ஆண்டு முதல் ஆண்டறிக்கைகள் (Annual Reports of the Archaeological Survey of India) வெளியிடப்பட்டன. ஆனால் 1937இல் இது நிறுத்தப்பட்டதுடன் "தொல்லியல் பரப்பாய்வுத்துறையின் ஆய்வுக்குறிப்புகள்" (Memoirs of the Archaeologica Survey of India) எனும் அறிக்கையும் வெளிவரவில்லை. எனவே 1946 இல் மார்டிமர் வீலர் 'பழங்கால இந்தியா' (Aneient India) எனும் ஆண்டு மலர் வெளிவர ஏற்பாடு செய்தார். 1952ஆம் ஆண்டில் 'இந்தியத் தொல்லியல் ஒரு மதிப்பீடு' (Indian Archaeology Areview) எனும் இதழையும் தொடங்கினார். ஆண்டு தோறும்

நடைபெறும் கள ஆய்வு, அகழாய்வு, ஆகியவை பற்றிய செய்திகள் இவற்றில் வெளிவந்தன.

சர்மார்ட்டிமர் வீலருக்குப் பின் A கோஷ், B P லால், M N தேஷ்பாண்டே P K. தாப்பர் முதலானோர் பொறுப்பேற்று தொல்லியல் துறை வளரப் பாடுபட்டனர். 1959 ஆம் ஆண்டு புதுதில்லியில் 'தொல்லியல் பள்ளி'(School of Archaeology) நிறுவப்பட்டு தொல்லியல் அலுவலர்கட்கும், மாணவர்கட்கும் தனிப் பயிற்சி அளித்தது.

பின்னர் 'ஊருக்கு ஊர்கள ஆய்வு' (Village to Village Survey) எனும் திட்டம் தொடங்கப்பட்டு மாநிலத்தின் வரலாற்று மதிப்புமிக்க இடங்களில் ஆய்வுகள், மதிப்பீடுகள் செய்யப்பட்டன. இத்திட்டத்தின் கீழ் தஞ்சை மாவட்டம் முழுவதும் ஆய்வு செய்யப்பட்டு, கல்வெட்டுகள் அனைத்தும் தனித்தனித் தொகுதிகளாக வெளியிடப்பட்டன.

தொல்லியலின் சிறப்பை அறிந்த அரசு, பரோடா, அலகாபாத், கல்கத்தா, சென்னை, பூனா, லக்னோ ஆகிய பல்கலைக்கழகங்களில் தொல்லியல் பாடத்தை அறிமுகப் படுத்தியது. பின்னர் மைசூர், தார்வாட், நாகார்ஜீனசாகர் பல்கலைக் கழகங்களிலும் விருப்பாடமாகத் தொல்லியல் தொடங்கப்பட்டது.

பூனாவிலுள்ள 'டெக்கான் கல்லூரி' (Deccan College) தொல்லியல் அகழ்வாய்வுப் பணியில் பல சாதனைகள் புரிந்துள்ளது. நர்மதை, சபர்மதி, கோதாவரி ஆற்றுப் படுக்கைகளை இது ஆய்ந்தது. கற்கால, உலோக கால பண்பாட்டுத் தொடர்பான பல இடங்களை இக் கல்லூரி ஆய்வுசெய்தது. H D. சங்காலியா போன்ற அறிஞர்களின் பெருமுயற்சியால் நாசிக், நிவாசா, ஜோர்வே,

மகேஷ்வர், அகார், லான்கஜ், நாவ்தா தோலி-முதலான பல்வேறு இடங்களில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

அண்மைக் காலத்தில் நவீன தொழில் நுட்பக் கருவிகளின் மூலம் அறிவியல் முறையில் அகழாய்வுகள் சீரிய முறையில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. மேலை நாடுகளைப் போன்று அதிநவீன கருவிகள் பயன்படுத்தப்பட்டால் நமது முன்னோர்களின் பண்பாட்டுநிலையை மேலும் நாம் துல்லியமாகப் படம் பிடித்துக்காட்ட ஏலும். அண்மைக்காலத்தில் இந்தியாவில் ஆழ்கடல் அகழாய்வுகள் பெருமளவில் நிகழ்த்தப்பட்டு வருகின்றமை வரவேற்கத்தக்கது.

## அகழாய்வுக்குரிய இடத்தைத் தேர்வு செய்தல் :

நாம் எல்லா இடங்களிலும் அகழாய்வு செய்வது இயலாது. எனவே எந்த இடத்தில் அகழாய்வு செய்தால் பண்டைய மனிதன் விட்டுச் சென்ற பழம் பொருட்கள், குடியிருப்புகள், கட்டப் பகுதிகள் கிடைக்கும் என்று பலவிதமான சோதனைகள் செய்து தகுதியான தோர் இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும் அகழாய்விற்குரிய இடத்தைத் தேர்ந்தெடுப்பதில் பின்பற்றப்படும் வழிமுறைகள் யாவை? என்பதைனை இங்கே காண்போம்.

## இலக்கியச் செய்திகள் :

ஒரு நாட்டின் பண்டைய இலக்கிங்களில் தலைநகரம் துறைமுகம், நகரங்கள், மாளிகைகள், அரண்மனைகள், கோட்டைகள், வாணிகம், மக்கள் வாழ்க்கை முதலான பல விதமான செய்திகள் கூறப்பட்டிருக்கும். இவற்றின் துணை கொண்டு ஆய்வுக்குரிய இடத்தைத் தேர்ந்தெடுக்கலாம். எடுத்துக்காட்டாக தமிழகத்தின் சங்க இலக்கியங்களில் உறையூர், காவிரிபூம்பட்டினம், மதுரை. வஞ்சி, கொற்கை முதலான புகழ்மிகு தலைநகரங்களைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இக்குறிப்புகளை அடிப்படையாகக்

கொண்டு ஒரு நகரத்தின் அமைவிடத்தையும் சிறப்பையும் அயல் நாட்டுத்தொடர்பையும் அறிந்து, அதனை ஆய்விற்குத் தேர்ந்தெடுக்கலாம்.

## கல்வெட்டுகள் கூறும் செய்திகள் :

பண்டைய கல்வெட்டுக்களும் அகழாய்வு செய்ய வேண்டிய இடத்தைத் தேர்ந்தெடுக்கத் துணை புரியும். தமிழகத்தை ஆண்ட பல்வேறு அரச மரபினரின் சிறப்புகள் அவர்களது தலைநகரம், துறைமுகம். ஆட்சிப் பரப்பு, வணிகமையம், வழிபாட்டுத்தலம், போர் நிகழ்ந்த இடம், வணிகக் குழுக்கள் போன்ற பல செய்திகள் கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றன. அவற்றில் சிறப்பான இடத்தை அகழாய்விற்குத் தேர்ந்தெடுக்கலாம்.

எடுத்துக்காட்டாக சேரர் வரலாறு கூறும் பதிற்றுப்பத்து இலக்கியத்தில் ஆண்பொருனைக்கரையில் அமைந்த கரூர் வஞ்சியின் சிறப்பு விரிவாகக் கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகாரம் மதுரை மாநகரின் சிறப்பையும் பாண்டியன் பெருமையையும் புகழ்ந்து பேசுகின்றது இதன் அடிப்படையில் தான் கரூர் அகழாய்விற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

## திருக்கோவில்கள், சிற்பங்கள், கலைச்சின்னங்கள் :

திருக்கோவில்கள், சிற்பங்கள் ஆகியன காணப்படும் இடங்கள் பண்பாட்டுச் சிறப்புமிக்க இடங்களே. அவற்றின் காலத்தையும் சிறப்பையும் கணித்து அப்பகுதியில் அகழாய்வுகள் நிகழ்த்தினால் பல தொல்லியல் சான்றுகள் கிடைக்கலாம். காரணம் கோவில்களைச் சுற்றியே அன்று மக்கள் வாழ்ந்துள்ளனர். எனவே திருக்கோவில்கள் மற்றும் கலைச்சின்னங்கள் காணப்படும் இடங்கள் அகழாய்வுக்குரிய இடங்களைத் தேர்ந்தெடுக்க உதவுகிறது.

## வெளி நாட்டினரின் குறிப்புகள் :

இந்திய நாட்டின் சிறப்பினைப்பற்றி கிரேக்கர், உரோமானியர், சீனர், ஐரோப்பியர், அரேபியர் முதலானோர் இந்தியரின் சிறப்பான பண்பாடு, கலை, வாணிகம், தொழில் ஆகியவை பற்றிப் பல விதமான குறிப்புகளை எழுதி வைத்துள்ளனர். பெரிப்புளூஸ் (Periplus Maris Erythraei- கி.பி. 80) எனும் நூலின் ஆசிரியர் துண்டிஸ், முசிறிஸ், நெல்குணாடா, கொல்கை, காபிரா பொடுக்கா, சோபத்மா முதலான துறைமுகப் பட்டினங்களைப் பற்றிக்குறிப்பிடுள்ளார். தாலமி எனும் நிலநூல் ஆசிரியரும் இத்துறைமுகங்களைப் பற்றிக் குறிப்பிடுள்ளார், இக்குறிப்புகள் உணர்த்தும் இடங்கள் தொண்டி, முசிறி, நீர்குன்றம், கொற்கை, குமரி, காவிரிப்பூம்பட்டினம், பாண்டிச்சேரி, மரக்காணம் என்பவையே ஆகும் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கோல்சிக்கு அப்பால் கடலைச் சார்ந்த கோட்டம் ஒன்றும் ஆற்கா என்ற உள்நாட்டுக் கோட்டம் ஒன்றும் இருந்ததாகவும் (பெரிப்ளூஸ் நூலாசிரியர்) குறிப்பிட்டுள்ளார் இவற்றை புகார்க் கோட்டமாகவும் உறையூர் கோட்டமாகவும் கொள்ளலாம்.

தாலமி (Ptolemy- கி.பி. 130.) பிளினி (Pliny -கி.பி.77) ஸ்ட்ராபோ ( Strabo) முதலான உரோம் நாட்டினரின் குறிப்புகளும் தமிழகத்தின் சிறந்த நகரங்கள், துறைமுகங்கள், சமுதாய வாழ்வு பற்றிச் சித்திரிக்கின்றன. தாலமி கப்பாரிஸ் என்று காவிரிப்பூம்பட்டினத்தையும், நிகாரி என்று நாகப்பட்டினத்தையும் குறிப்பிட்டுள்ளார். சீனப்பயணியான யுவான் சுவாங் (கி.பி. 7 ஆம் நூற்றாண்டு) காஞ்சிபுலோ என்று காஞ்சி புரத்தைக் குறிப்பிடுகிறார். அயல் நாட்டினரால் குறிக்கப்பெறும் இப்புகழ்மிகு இடங்கள், பண்டு சிறப்புற்று விளங்கியதால் அவற்றை அகழாய்வு செய்யத் தேர்ந்தெடுக்கலாம், அதன் விளைவாக நமது பண்டைய வரலாறும் தெளிவு பெறும்.

## மண் மேடுகள் (Mounds) :

பண்டைய மக்கள் வாழ்ந்த நகரங்கள், ஊர்கள், வணிகமையங்கள் காலப்போக்கில் அழிவுற்று மண் மேடுகளாகக் காட்சி தருகின்றன. பொதுவாக இப்பகுதிகளை நேரில் பார்வையிடுங்கால் மக்கள் வாழ்ந்தற்கான தடயங்கள், கட்டத்தின் இடிபாடுகள், பழம் பொருட்கள் கிடைக்கலாம். ஆரப்பா, மொகஞ்சதாரோ, கலிபங்கன், குறும்பன் மேடு,காஞ்சிபுரம் பல்லவமேடு, செங்கமேடு (தென்னார்க்காடு மாவட்டம்) கங்கை கொண்ட சோழபுரம் கோட்டை மேடு ஆகிய இடங்களும் மண்மேடுகளாகக் கிடந்தவையே. ஊர் நத்தம் பகுதிளும் அகழாய்விற்கு உரியவையே. இதுபோன்ற இடங்களை அகழாய்விற்குத் தேர்ந்தெடுத்தால், நமது பண்டைய நாகரிகம் மேலும் வெளிப்படும்.

## ஆற்றின் கரைகள், ஓரங்கள் (River Sections) :

பண்டைய நாகரிகங்கள் பெரும்பாலும் ஆற்றங்கறைகளில் தோன்றியவையே. பண்டைய மக்களின் வாழ்விடங்கள் வழியாக ஆறுகள் அறுத்துக் கொண்டு செல்லும் போது, ஆங்குள்ள பழம் பொருட்கள் வெளிப்படும். மேற்பரப்பாய்வில் அவை கிடைத்தால் அப்பகுதியில் அகழாய்வு மேற்பரப்பாய்வில் அவை கிடைத்தால் அப்பகுதியில் அகழாய்வு மேற்கொள்ளலாம். எடுத்துக்காட்டாக பாண்டிச்சேரி அரிக்கமேட்டிலும், தமிழ்நாட்டின் செங்கமேடு (தென்னார்க்காடு மாவட்டம்) என்னுமிடத்திலும் பாய்ந்து செல்லும் ஆற்றங்கரைகளில் பண்டைய பானை ஓடுகளும், பழம் பொருட்களும்கிடைத்தன. எனவே அங்கு அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டு, வெற்றிகரமாக முடிந்தன. கரூர் அமராவதி ஆற்றங்கரையிலும் இவ்வாறே அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது.

நதிகள் கடலில் விழும் முகத்துவாரங்களில் துறைமுகம்பட்டினம், நகரம் ஆகியவை பழங்காலத்தில் இருந்திருந்தால் அப்பகுதிகளையும் அகழாய்விற்குத் தேர்ந்தெடுக்கலாம். காவிரிப்பூம்பட்டினம், கொற்கை, அழகன்குளம், தொண்டி, பெரிய பட்டினம் முதலான இடங்களில் இதனடிப்படையிலேயே அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. பாலாறு கடலில் கலக்குமிடத்தில் உள்ள வசுவ சமுத்திரமும் இவ்வாறுதான் அகழாவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

ஆகாய நிழற்பட முறை(Ariel Photdgraphy) காந்தசக்தி அளவை முறை (Magnetic Survey) மின்தடை அளவை முறை (Electrichl Resisting Survey) பண்டைய நினைவுச் சின்னங்கள் (Tombs) குகைகள் ஆகியவற்றின் உட்புறத்தில் பெரிஸ்கோப் நிழற்படக்கருவி மூலம்( Periscope Camera) புகைப்படம் எடுத்தல் போன்ற முறைகளின் மூலமாகவும் ஓரிடத்தை நாண் அகழ்ப்விற்குத் தேர்ந்தெடுக்காலம்.

## மேற்பரப்புக் கள ஆய்வு (Exploration) :

முன்பு கூறப்பட்ட பலவகையான முறைகள் ஓரிடத்தைத் தேர்ந்தெடுக்கத்துணை புரியாவிடின், இறுதியாக மேற்பரப்புக் கள ஆய்வினைப் பின்பற்றி வெற்றி காணலாம். ஆய்வாளர் அந்த இடத்திற்கு நேரடியாகச் சென்று அப்பகுதியில் கறுப்பு சிகப்பு பானையோடுகள், பழம் பொருட்கள், எலும்புகள், வேறு தடயங்கள் மேல்பரப்பில் கிடைக்கின்றதா? என்பதனை ஆயலாம். அடுத்து அப்பகுதியில் வீட்டு மனைக்கு கடைகால் (அஸ்திவாரம்) தோண்டியிருந்தால், கிணறு வெட்டியிருந்தால், எருக்குழித் தோண்டியிருந்தால் அப்பகுதிகளில் பழம்பொருட்கள் இருந்திருந்தால் நிச்சயம் கிடைக்கும். எனவே மேல் பரப்பில் கிடைக்கும் பழம் பொருட்களின் அடிப்படியில் ஓரிடம் ஆய்விற்குத்

தெரிந்தெடுக்கப்படலாம். மழை காலங்களில், வெள்ள காலங்களில் மண் அரிப்பு ஏற்படும். அதனை ஆய்ந்து பார்த்தாலும் பயன் கிடைக்கும்

## அகழாய்வு கருவிகள் :

அகழாய்வினை நவீனமுறைப்படி மேற்கொண்டு, மறைந்த பல பழம் பொருட்களை வெளிப்படுத்தி, பண்டைய பண்பாட்டை வெளிப்படுத்துவதில் பயிற்சி பெற்ற அகழாய்வாளர்களின் தூயபணி மகத்தானது. அகழாய்வு சரிவர நடைபெற மட்ட அளவைக் கருவி (Levelling Instrument) நீண்ட கூர்முனை அளவுக் குச்சிகள் (Ranging Rods) தளமட்டக் கோணமானி (Theodolite) காட்சியின் போதே திசைக்குறிப்புத் தரும் நில அளவுக்கருவி (Prismatic Compass பிரிஸ்மேட்டிக் காம்பஸ்) அளவு நாடா (Tape) அளவு சங்கிலி (Chain) முதலான பரப்பாய்வுக்கருவிகளும் நீர்க்காப்புடைய கித்தான், உருப்பெருக்காடி, நுண்ணோக்கி (Microscope) வரைபட மேசை, கிராப்தாள் (Graph Sheet), ரசமட்டம், தூக்கு குண்டு, குறிப்பேடு, சிறுசிறு துணிப்பைகள், கோணிகள், துடைப்பான், சிறுகத்தி, மண்வெட்டி, பிரஷ் (Brush) ஏணி களைக்கொத்தி, சல்லடை, காரைச்சட்டி, நூல், காகித உரைகள், பஞ்சு, மட்கலக்குறிப்பு அட்டை ஆகியனவும் தேவைப்படுகின்றன.

அகழாய்வின் போது நிழற்படக்கருவிகள் (Photographic Equipments) பெரிதும் உபயோகிக்கப்படுகின்றன. தேர்வு செய்யப்பட்டஇடத்தை அகழாய்வு செய்வதற்கு முன்பும், ஆய்வுக்குழியினை வரையறை செய்து ஆய்புகள் நடப்பட்ட பின்னரும், அகழாய்வில் கிடைக்கும் பழம் பொருளை அதே பாள நிலையில் வைத்து படம் எடுக்கவும், அனைத்து பழம்பொருட்களையும் வரிசையாக வைத்துப் படம் எடுக்கவும் நிழற்படக் கருவி பயன்படுகின்றது.

**அகழாய்வாளரின் பணிகள் (ஆய்வுத்தொகுப்பு வெளியிடல்) :**

அகழாய்வில் கிடைத்த பழம்பொருட்களின் காலத்தை நிர்ணயித்தல், அகழாய்வு பற்றி ஆய்வுத் தொகுப்பு எழுதுதல் ஆகியன அகழாய்வாளரின் முக்கிய பணிகளாகும். தொல்லியல் அகழாய்வில் கண்டறியப்பட்ட உண்மைகளை, கண்டுபிடிப்புகளை (Findings) அறிக்கையாக வெளியிட்டால் தான் வரலாற்றறிஞர்களும் ஆய்வாளர்களும் அவற்றை அறிந்து நமது பண்பாட்டு வரலாற்றைச் செம்மையாகமாற்றி எழுதிமுடியும். இந்தியா முழுமையிலும் பல ஆய்வுகள் அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப்படுகின்றன. அவற்றின் முழுமையான ஆய்வுத் தொகுப்புகள் வெளியிடப் பெறாமை ஆழ்ந்த வருத்தத்தை அளிக்கிறது. அகழாய்வின் கண்டுபிடிப்புகள் பொதுமக்களுக்குச் சேர வேண்டும். எனவே தான் ரொனால்டு கிளார்க் என்னும் அறிஞர் " தொல்லியல் கண்டுபிடிப்புகளை இழிவுபடுத்தாமல் பெரும் பான்மை யோருக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று அறிவுரை கூறியுள்ளார். அகழாய்வுத் தொகுப்புகளைத் தயாரிக்காத அகழாய்வு நிறுவனத் தலைவர்களை புகழ்மிகு தொல்லியல் அறிஞரான சங்காலியா அவர்கள் கடுமையாகச் சாடியுள்ளார். இருப்பினும் பல அகழாய்வுகளைப்பற்றிய சுருக்கங்கள் தான் 'இந்தியத் தொல்லியல் ஒரு மதிப்பீடு' (Indian Archaeology - A Review) எனும் மலரில் வெளிவந்துள்ளன. இத்தொகுப்பு அறிக்கைகள் பல நிழற்படங்களுடனும், காலக்கணிப்புடனும் விரிவாக வெளியிடப் படுதல் வேண்டும்.

**பிற துறையினரின் உதவியும் ஒத்துழைப்பும் :**

தொல்லியல் ஆய்வாளர்கள் தனித்துறையினர் ஆன போதிலும் பிறதுறையினரின் ஒத்துழைப்பையும் உதவியையும் பெற வேண்டியவராக உள்ளார். அகழாய்வாளர் தனித்து சில முடிவுகளை

எடுத்தல் இயலாது. இந்தியாவில் அகழாய்வினர் பிற துறைகளின் கூட்டு முயற்சியுடன் அல்லது அத்துறையினரின் உதவியைப் பெற்று ஆய்வுகள் செய்து வருகின்றனர்.

புவியியல் (Geography) மண்ணியல் (Geology) விலங்கியல் (Zoology) தாவரவியல் (Botany) இயற்பியல் (Physics) வேதியியல் (Chemistry) மானிடவியல்(Anthropology) மருத்துவவியல், கடலியல் துறை (Oceanography) பொறியியல் துறை (Engineering) முதலான துறைகளின் வல்லுநர்களது உதவியை அகழாய்வாளர்கள் பெறவேண்டியுள்ளது.

# 2. அண்மைக்கால அகழாய்வுகளின் கண்டுபிடிப்புகள்

தமிழ் வரலாறு தமிழர் வரலாறு ஆகியவை அண்மைக்கால அகழ்வுகளால் விளக்கமடைந்துள்ளன. சென்ற இருபதாண்டுகளில் தமிழகத்தின் பல்வேறு பண்டைய வாழ்விடங்களில் அகழ்வாய்வுகள் நடைபெற்றுள்ளன. கரூர், போளுவாம்பட்டி, கொடுமணல், அழகன்குளம், பூம்புகார், படைவீடு, திருக்கோயிலூர், சேந்தமங்கலம், ஆகிய ஊர்களில் அகழ்வாய்வுகள் நடைபெற்றுள்ளன. அவற்றில் பல்வேறு காலங்களைச் சார்ந்த வரலாற்றுச் சான்றுகள் கிடைத்துள்ளன.

## கரூர் அகழாய்வு :

கரூர் அகழாய்வு நான்கு பருவங்களில் நடைபெற்றது. இவ்வகழ்வாய்வுகளில் கட்டடப்பகுதிகள், சலதாரைகள், கூரை ஓடுகள், உரோமானிய மதுச்சாடிகள், உரோமானிக் காசுகள், சாதவாகன காசுகள், கைலேரன் ஓடுகள், கருப்பு சிவப்புப்பானை ஓடுகள்- போன்றவை கிடைத்துள்ளன. பானை ஓடுகளில் எழுத்துக்களும் குறியீடுகளும் பொறிக்கப்பட்டிருந்தன.

கரூர் பண்டை நாளைய வாணிக நகரமாக விளங்கிய தன்மை இவ்வகழ்வாய்வுகளால் உறுதிப்படுகின்றது. சங்க இலக்கியம் கருவூரைப் பற்றிக் குறிப்பிடும் செய்திகள் அண்மையில் நடைபெற்ற அகழாய்வுகளால் உறுதிப்படுகின்றன. இவ்வூர் கி.மு. 7ஆம் நூற்றாண்டிலிருந்து நிலைபெற்றுள்ள தன்மையும் உறுதிப்படுகின்றது. இதனால் இந்தநகர் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே சிறந்திருந்தமை புலனாகும்.

உரோமனிய மதுச்சாடிகளின் துண்டுகளும் உரோமானியக்காசுகளும், உரோம்நாட்டிற்கும் கரூருக்கும் நிலவிய வாணிகத் தொடர்பினை உறுதிப்படுத்துகின்றன. கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. 4ஆம் நூற்றாண் டு வரை உரோமானிய

மன்னர்கள் வெளியிட்ட பொன்வெள்ளிக் காசுகள் இங்கு கிடைத்துள்ளன.

கரூர் அமராவதிக்கரையில் பல அரிய கலைப்பொருள்கள் கிடைத்துள்ளன. அவற்றில் பத்துக்கும் மேற்பட்ட மோதிரங்களில் உரியோர் பெயரும் பொறிக்கப்பட்டிருந்தன. தித்தன், குறவன், வேடுவன், சாத்தன், பேர் அவதான், உபாவன், தியன், ஓதலன், சாதன் சாதி வேஸ (ன்) மித்ரன், கண்ணன் உதிரன் ஆகிய பெயர்கள் பொறிக்கப்பட்டிருந்தன. இவை அனைத்தும் சங்க காலத்தைச் சேர்ந்தவை. முதல் மூன்று பெயர்கள் தமிழ் மரபிற்குரியவை. மற்றுமுள்ள ஆறு பெயர்கள் வட நாட்டுடன் கொண்டிருந்த தொடர்பு உறுதிப்படுகின்றது கரூரில் சேர மன்னன் இரும்பொறையன் பெயர் பொறித்த காசுகள் கிடைத்துள்ளன. அக்காசுகளில் கொல்லிரும்புறை என்றும் கொல்லிப்புறை என்றும் எழுதப்பட்டிருந்தது. இப்பெயர்கள் சங்ககால எழுத்தில் பொறிக்கப்பட்டருந்தது மாக்கோதை என்ற பெயர் பொறிக்கப்பட்ட வெள்ளிக் காசுகளும் இங்கே கிடைத்துள்ளது. இவை அனைத்தும் சேர மன்னர்கள் வெளியிட்ட காசுகள் ஆகும் அவற்றில் வில், யானை பொறிக்கப்பட்டுள்ளன.

கலை நயம்மிக்க கணையாழிகளும் கரூரில் கிடைத்துள்ளன. அப்போலோ உருவம் பொறித்த கணையாழி, மிதுன உருவம் பொறித்த கணையாழி, குதிரை, மீன் எருது, அசோக மரம், ஸ்வஸ்திக் ஆகிய உருவங்கள் பொறித்த கணையாழிகள் கண்டு பிடிக்கப் பெற்றுள்ளன இவை அனைத்தும் பொனனால் செய்யப்பெற்றவை. இவை கருவூர் பொற்கொல்லர்களால் செய்யப்பெற்றவை இதனால் கரூரில் பொன் வாணிகம் சிறப்புப் பெற்றமை அறியப்படுகின்றன.

கருவூரில் கிடைத்துள்ள தொல்பொருள்களில் ரோமானியக்காசு அச்சடிக்கும் அச்சு ஒன்று குறிப்பிடத்தக்கது. இது இரும்பால் செய்யப்பெற்றது. கி.பி. 2ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த மன்னன் காலத்தியது. அதனால் கருவூரிலும் உரோமானியக் காசுகள்

அச்சடிக்கப்பெற்றன என்பது தெரியவருகின்றது. இங்கு இந்தோகிரேக்கர் காசுகள் சீனக்காசுகள் பொனீசியக்காசுகள் சாதவாகன காசுகள், பல்லர் காசுகள், குஷான காசுகள், பாண்டியர் காசுகள், சோழர் காசுகள், விஜயநகரக் காசுகள், நாயக்கர் காசுகள் கிழக்கி நீதியக்கம்பெனி காசுகள் போன்றவை மக்கள் அகழ்வில் கிடைத்த வண்ணம் உள்ளன. இக்காசுகள் பண்டை நாள் முதல் அணைமைக்கலாம்வரை கருவூர் வாணிகச் செழிப்பு மிக்க ஊராக விளங்கிய தனைவலியுறுத்துகின்றன. சங்க காலத்தில் இவ்வூர் சேரர் தலைநகரமாகவும் விளங்கிய செய்தியும் உறுதிப்படுகின்றன.

## கொடுமணலின் சிறப்பு :

பெரியார் மாவட்டம் கொடுமணல் பண்டைநாளில் மணி வாணிகம் நடைபெற்ற நகரமாக விளங்கியது. அவ்வூரிலுள்ள நந்தக்காட்டில் 1985ம் ஆண்டு முதல் 89ம் ஆண்டு வரை அகழாய்வு செய்யப்பெற்றது. அவ்வூர் கி.மு. 3ம் நூற்றாண்டு முதல் கி.பி. 3ம் நூற்றாண்டு வரை தொடர்ந்து நிலை பெற்றிருந்த தன்மை அகழ்வுச் சான்றுகளால் உறுதிப்படுகின்றது. அவ்வூர் மக்கள் தொடக்கத்தில் கால்நடை வளர்ப்பிலும் புஞ்சைத்தானியம் பயிர் செய்வதிலும் ஈடுப்ட்டிருந்தனர். என்பதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. இது கி.மு. முதல் நூற்றாண்டு முதல் மணிகள் செய்யும் தொழிற்கூடமாக விளங்கியது. அங்கு பல்வேறு வகையான கற்களைக் கொண்டு அழகு மணிகளைச் செய்தனர். அவற்றில் லாப்பிஸ்லகுலி(Lapislazuli) என்ற கல் ஆப்கானிஸ்தானத்திலிருந்து கொண்டு வரப்பட்டது. அக்கல் உலகில் வேறெங்கும் கிடைக்கவில்லை. கார்னீலியன் எனற கல் குஜராத் மாநிலத்தில் கிடைப்பது. அக்கல் கொங்கு நகரங்களுக்கு கொண்டு வரப்பெற்று அழகுமணிகளாச் செய்யப்பெற்றது. கொடுமணலில் மட்டும் 6000 மணிகள் கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது ஒரே ஈமக்குழியில் 2000 மணிகள் கிடைத்துள்ளன. அமெத்தியிஸ்ட் என்ற

கல் நீலகிரியில் கிடைப்பது. அக்கல்லினாலேயே அம்மலைக்கு நீலகிரி என்ற பெயர் இடப்பெற்றது. அக்கல்லும் கொடுமணலில் கிடைத்துள்ள மணிகளில் கோர்க்கப்பட்டுள்ளன.

கொங்குநாட்டில் பெரில் ( Beryl) என்ற கடல் நீலப்பச்சைக்கல் கிடைத்தது. அக்கல்லும் கொடுமணலில் மணிகள் செய்யப்பயன்பட்டது. இன்னும் பழுப்புக்கல் பளிங்குக்கல் என்ற இருவகைக் கற்களும் கொடுமணலில் மணிகள் செய்யப்பயன்பட்டன. இவை அனைத்தும் வடநாட்டிற்கும் உரோம் நாட்டிற்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

கொடுமணல் மக்கள் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார்கள் என்பதற்குப் பானைப் பொறிப்புகள் சான்றுகளாக விளங்குகின்றன. குலந்தை, சம்பல் அகல், வருணி அகல், ஸாதந்தை, அந்தவ(ன்), கண்ணன், ஆதன், விசாகி, பண்ணன் தன்வேண்ணிராழி ஈத்த தடா என்ற வாசகங்கள் பொறித்த ஓடுகள் நூற்றுக்கும் அதிகமாகக்கிடைத்துள்ளன. ஒரு ஓட்டில் நிகம என்று பொறிக்கப்பெற்றிருந்தது. 'நிகம' என்ற வடசொல்லுக்கு நகரம் அல்லது நகர ச்பை என்று பொருள். அதனால் கொடுமணல் பண்டைநாளில் நகரமாகவும், நகரமாந்தர் வாழ்ந்த இடமாகவும் விளங்கியது எனக் கருதமுடியும். அவ்வூர் கி.மு. முதல் நூற்றாண்டு முதல் படிப்படியாக நகரமாக எழுச்சி பெற்றது என்பதனை அகழாய்வுச் சான்றுகள் வலியுறுத்துகின்றன. நடுகல் வைக்கும் பழக்கத்திற்கு முன்னோடியாக விளங்கிய, குத்துக்கற்கள் இப்பகுதியில் நடப்பட்டிருந்தன அவை பனை மர உயரம் கொண்டவை.

இரும்பு உருக்கும் ஊதுலைகளும் கொடு மணலில் கண்டு பிடிக்கப்பெற்றன. சென்னிமலை இரும்புத்தாதுகள் கிடைக்கும் இடம். இங்கு இரும்பு உருக்கும் தொழில் நடைபெற்றதைப் பற்றி புக்கானன் என்ற வெள்ளையர் எழுதிய குறிப்புகள் மூலம் அறிய முடிகின்றது. அந்த முறையிலேயே கொடுமணலில் இரும்பு உருக்கும் தொழில்

நடைபெற்றுள்ளது இரும்பினைத்தாதுக்களிலிருந்து பிரித்தெடுக்க ஊதுலையைப்பயன்படுத்தியுள்ளனர். குழம்பாக வந்த இரும்பினை மண்குழாய்களில் ஊற்றி ஆறவைப்பர் மண் குழாய் உடைத்து எடுத்துபின் இரும்பு நீண்ட கம்பி போல் அமையும். அக்கம்பியை வாள், வேல், அம்பு, குதிரை சேனம் ஆகியவை செய்யப்பயன்படுத்தப் பெற்றது. கொடுமணலில் ஆறடி நீளமும் ஒரு அங்குலமும் கொண்ட சுத்திகிடைத்துள்ளது. இரும்பு ரோமானிய நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பெற்றது. தமிழகத்தில் எந்த முறையில் இரும்பை உருவாக்கினார்களோ அந்த முறையில் செய்யப்பெறும் இரும்புதான் சிறந்தது என்று இன்று உலக வல்லுநர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். கொடுமணலில் வேளிர் ஆட்சி நடைபெற்றதற்கான சான்றுகளும் கிடைத்துள்ளன. கபிலர். 'கொடுமணம் பட்ட வினைமான் நன்கலம்' என்று பாடுவார். கொடுமணல் அகழ்வுகள் கபிலர் புகழும் கொடுமனம் இன்றைய கொடுமணலே ஆகும் எனற செய்தி கிடைக்கின்றது. அது மட்டுமின்றி பதிற்றுப்பத்து கூறும் நியமம் கொடுமணலில் இருந்தது என்று செய்தியும் கிடைக்கின்றது.

"கொடுமணம் பட்ட நெடுமொழி யொக்க லொடு
பந்தார்ப் பெயரிய பேரிசை மூதூர்க்

பதிற்றுப்பத்து - 67வது பாடல். வரி 1-2

"கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்
பந்தப்ப பயந்த பலர் புகழ் முத்தம்"

மேலதே - 74வது பாடல் வரி 5-6

கொடுமணல் பொன்று பந்தர் எனும் இடமும் சங்ககாலத்தில் புகழ்பெற்றருந்தது என்பது பதிற்றுப்பத்தால் அறியப்படுகின்றன. எனவே பந்தரிலும் அகழாய்வு நிகழ்த்தப்பெறல் வேண்டும் அப்போதுதான் பந்தரின் சிறப்பு வெளியாகும்.

போளுவாம்பட்டி:

இன்று சிற்றூராக விளங்கும் போளுவாம்பட்டி பண்டைநாளில் பெருநகரமாக விளங்கியது. ஆவ்வூரில் பத்து ஆண்டுகட்குமுன் நடைபெற்ற அகழ்வாய்கள் அவ்வூர பண்டைய நகரமாக விளங்கிய செய்தியைத் தெரிவிக்கின்றது. அங்கு புத்தர் உருவங்கள், புத்த விகாரைகளின் இடிபாடுகள், இயக்கன் இயக்கி உருவங்கள், அரசன் அரசி உருவங்கள் போன்றவை கண்டுபிடிக்கப்பெற்றன. அவை அவ்வூரில் புத்தசமயம் சிறப்புற்றிருந்த தன்மையை வலியுறுத்துகின்றன. மேலும் தமிழகத்தில் வேறெங்கும் கிடைக்காத மண் முத்திரை ஒன்று கிடைத்துள்ளது. அதில் புலி, வில், அம்பு, ஆகிய உருவங்களுடன் தூண் மீது நிற்கும் சிங்கமும் உள்ளன. கி.பி. 6-7ஆம் நூற்றாண்டு எழுத்தில் வாசகமும் உள்ளது. ஓலைக்கட்டில் மீது வைக்கப்பட்டதற்கான ஓலைப்பதியும் நூல் பதிவும் உள்ளன நந்திக் கலம்பகத்தில் வரும் 'மண் பொதிமுடங்கல்' என்பது இதுதானோ? என்ற கேள்வி நம் மனத்தில் எழுகின்றது.

போளுவாம்பட்டியில் எழுத்துப்பொறித்த பானை ஓடுகளும் நிறைய கிடைத்துள்ளன. அவ்வோடுகளில் பிற்கால (தமிழி) பிராமியும், வட்டெழுத்தும் கலந்துள்ளன. அதனால் அவை கி.பி.4-6ஆம் நூற்றாண்டுகளுக்குரியவையாகக் கொள்ளலாம். வெள்ளி முத்திரைக காசுகள், பொன் அணிகலன்கள் போன்ற தொல்பொருட்களும் அங்கு கிடைத்துள்ளன. அவை கி.பி. 4-5ஆம் நூற்றாண்டிற்குரியவை.

போளுவாம்பட்டி கோட்டைககாட்டில் உள்ள நாகேசுவரசுவாமிக்கோயில் கல்வெட்டுகள் அவ்வூரை முட்டம் என்றே அழைக்கிறது. இப்பெயர், கி.பி. 3ஆம் நூற்றாண்டிலிருந்து வழக்கித்திலிருந்திருந்திருக்க வேண்டும். இவ்வூரில் வாணிக வளமும், பௌத்த சமய செல்வாக்கும் நிலைபெற்றிருந்தமை அகழ்வுச் சான்றுகளால் உறுதிப்படுகின்றன.

அழகன் குளம் வைகை ஆறு கடலோடு கலக்குமிடத்திலிருந்து தெற்கே சில கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் ஊர், இவ்வூரில் கி.மு 4ஆம் நூற்றாண்டிலிருந்து மக்கள் வாழ்ந்துள்ளனர். இது கி.பி. 4ஆம் நூற்றாண்டு வரை நிலைபெற்றிருந்தமைக்கான சான்றுகள் கிடைத்துள்ளன. அழகன் குளத்தில் உரோமனிய ஓடுகள் பெருமளவில் கிடைத்துள்ளன. அவ்வோடுகள் கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. 4ஆம் நூற்றாண்டு வரையிலான காலக்கட்டத்திற்குரியவை. அவ்வூர் யவனர் குடியிருப்பாகவே இருந்திருககு வேண்டும். பானை ஓடுகளின் குறியீடுகள், பிராமி எழுத்துக்களில் பொறிக்கப்பட்டிருந்தன. இவ்வூரில் கிடைக்கும் பிராமி எழுத்துகளும் ஈழத்தில் கிடைக்கும் பிராமி எழுத்துக்களும் ஒன்று போலவே அமைந்துள்ளமையால் இவ்விருபகுதிகளும் கலை, பண்பாடு, பொருளாதாரம் ஆகியவற்றில் ஒருமைப்பாட்டுடன் திகழ்ந்தமை புலனாகும் இங்கு உரோமானியக்காசுகள் இரண்டு கிடைத்துள்ளன. இங்குக் கிடைத்த ஒரு ஓட்டில் கப்பலின் வடிவம் வரையப்பட்டிருந்தது. இது அழகன்குளம் கப்பல் வாணிகத்தில் சிறப்புற்றிருந்த தன்மையை வலியுறுத்திகின்றது.

அழகன்குளம், யவன நிலநூல் வல்லுநர் டாலமி கூறும் சாலியூர் ஆகலாம் என்ற கருத்து இங்கு குறிப்பிடத்தக்கது.

பூம்புகார் சங்க இலக்கியத்திலும் இரட்டைக் காப்பியத்திலும் புகழப்பெறும் ஊர். பூம்புகார் அகழ்வாய்வு அவ்வூரின் வரலாற்றினைத் துல்லியமாக அறிய உதவுகின்றது இவ்வூர் பல நாட்டு மக்கள் வந்து தங்கிச் செல்லும் நகரமாக விளங்கியது. பூம்புகார் அகழாய்வில் புத்தவிகாரப்பகுதிகளும், நீர் தேங்கும் குளமும் கிடைத்துள்ளன. பாலநாடு கல்லில் செயபப்பெற்ற புத்த பாதம் கண்டுபிடிக்கப்பெற்றது. பூம்புகாரில் அண்மையில் கடலடி அகழ்வாய்வு முயற்சியும் தொடங்கப்பெற்றுள்ளது. அங்கு ஏழு கிலோ மீட்டர் தொலைவிற்குள் பல்வேறு தொல்பொருட்கள் இருப்பது

கண்டறியப்பட்டுள்ளது. அதனால் பண்டைய பூம்புகாரின் பல பகுதிகள் கடலுக்குள் மூழ்கியிருக்க வேண்டும என்ற கருத்தும் உறுதிப்படுகின்றது.

கொற்கை பண்டை நாளைய பாண்டியர்களின் தலைநகரமாகவும், கடற்கரைப்பட்டினமாகவும் நிலைபெற்றிருந்தது. அதனால் அரசியல் பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த ஊராகவும் விளங்கியது. அவ்வூரில் நடைபெற்ற அகழ்வில் கி.மு. 7ம் நூற்றாண்டு வாழ்விடமும் உறைகிணறுகளும். பாண்டியர் காசுகளும் கல்மணிகளும் கண்டறியப்பட்டுள்ளன. மேலும் எழுத்து பொறித்த பானை ஓடுகள் பல கணடுபிடிக்கப்பட்டன இச்சான்றுகள் கொற்கையின் தொன்மையையும் வரலாற்றுச் சிறப்பினையும் அறிய உதவுகின்றன. கிரேக்கர்கள் கொற்கையுடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர்

பாண்டிச்சேரியில் ஐம்பதாண்டுகளுக்கு முன் மார்ட்டிமர் வீலர் அகழ்வாய்வு செய்தார். அவருக்குப்பின் 1990 91ல் சென்னைப் பல்கலைக்ழகமும் அமெரிக்கப்பல்கலைக்கழகமும் இணைந்து நடத்திய அகழ்வாய்வு சில செய்திகளைத் தந்துள்ளது. அவற்றில் ஒன்று வளவன் என்று எழுதப்பெற்ற பானை ஒடு. இவ்வோடு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட ஓடு. அதில் வளவன் என்று எழுதப்பெற்றிருப்பது சோழர்களுக்கும் பாண்டிச்சேரிக்குமிடையில் நிலைபெற்றிருந்த பண்பாட்டுத் தொடர்பினை அறிய உதவுகின்றது. தமிழக உரோமானிய வணிக உறவு உரோமானியக் குடியிருப்பு ஆகியன பற்றி அரிக்கமேடு அகழாய்வு உணர்த்துகிறது.

வசுவ சமுத்திரம், காஞ்சிபுரம் ஆகிய ஊர்களில் நடைபெற்ற அகழ்ழாய்வினால் அவ்வூர்களுடன் ரோமானியர்கள் கொண்டிருந்த தொடர்பு புலனாகின்றது. உரோமானிய மது சாடிகள், புத்த விகாரை இடிபாடுகள், தோல் பதனிடும் தொட்டிகள் போன்றவை கண்டறியப்பட்டுள்ளன. வசுவசமுத்திரத்தில்

தோல்பதனிடும் தொழில் நடைபெற்றதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன.

அதியமான் கோட்டை, அப்புக்கல், மல்லப்பாடி திருவாமாத்தூர், செங்கமேடு, குடியம் ஆகிய ஊர்களில் செய்யப்பட்ட அகழ்வுகள் இவ்வூர்களின் பழைய கற்கால, புதிய கற்கால, பெருங்கற்கால வரலாற்றுக் காலச் செய்திகள் புதைந்திருந்தமையை வெளிப்படுத்துகின்றன, தமிழ்நாட்டு அகழாய்வினால் வரலாற்றுக்கு முற்பட்ட கால மக்களின் வாழ்விடங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. உலகப் பழங்கற்காலப் பண்பாட்டுற்கு இணையான சென்னை தொல்பழங்கற்காலக் கருவிகளின் தொழிற்கூடம் (Madras Industry) கண்டுபிடிக்கப்பட்டது. தருமபுரிப்பகுதியில் புதிய கற்காலப் பண்பாட்டிற்கு முற்பட்டதான நுண்கற்கருவிகள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன, கள ஆய்வு, அகழாய்வின் மூலம் தமிழகத்தில் புதிய கற்காலம் பரவலாக வடமாவட்டங்களில் நிலை பெற்றிருந்தமை புலனாகின்றது, இது ஏறத்தாழ கி.மு. 2000 முதல் கி.மு. 600 வரையிலான காலத்தைச் சேர்ந்தது என்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. தமிழ் நாட்டின் ஒரு சில இடங்களில் புதிய கற்காலத்திற்கும் இரும்பு காலத்திற்கும் இடைப்பட்ட கல் செம்புக் காலம் (Chalcolithic Age) இருந்தமை அகழாய்வுகளால் புலனாகின்றது. ஆயினும் பல இடங்களில் புதிய கற்காலத்தை அடுத்து இரும்புக்காலப்பண்பாடு இலங்கியதையும் அகழாய்வு அறிவிக்கின்றது.

தென்கிழக்காசிய நாடுகள், சிரிலங்கா, செங்கடல் பகுதி ஆகிய பகுதிகளில் நடைபெற்ற அகழ்வில் கிடைத்த பொருட்களில் தமிழ் எழுத்து பொறித்த பானை ஓடுகள் கட்டளைக் கல் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. செங்கடல் அலெக்சாண்டிரியா பகுதியில் கிடைத்த பானைப் பொப்புகளில் கண்ணன், சாத்தன் கோற்புதல்

என்று எழுதப்பட்டிருந்து. தாய்லாந்தில் கிடைத்த கட்டளைக் கல்லில் பெரும்பதங்கல் என்று எழுதப்பெற்றிருந்து. இது பொன்னுரைக்கும் கல். இவ்வெழுத்துப் பொறிப்புகள் அனைத்தும் சங்ககாலத்தைச் சேர்ந்தவை.

வியட்நாமில் தோண்டிடெடுக்கப்பெற்ற தூண் கல்லில் உள்ள சமஸ்கிருதக் கல்வெட்டில் அந்நாட்டு மன்னனின் மெய்க்கீர்தி அமைந்துள்ளது. இந்திய நாட்டுப் புராண புருடர்களுடன் ஒப்பிடப்பிட்டு அவன் புகழப்பெறுகின்றான். அவ்வாறு புகழும் மெய்க்ககீர்த்தியில் நீதியில் கனக பாண்டியனைப் போல என்று அக்கல்வெட்டு அவன் நீதியைப் புகழ்கின்றது. அக்கல்வெட்டு 1500 ஆண்டுகளுக்கு முன்பே பொறிக்கப்பெற்றது. அதனால் பொற்கைப் பாண்டியன் வரலாறு 1500 ஆண்டுகளுக்கு முன்பே கடல் கடந்த நாடுகளில் பரவியது என்று செய்தி பெறப்பப்படுகின்றது.

ஈழத்தில் நடைபெற்ற அகழ்வுகளில் தமிழ்ப்பிராமி எழுத்து பொறித்த பானை ஓடுகளும் முத்திரையும் அங்கு தமிழ்ர் வாணிகம் செய்த தன்மையை வலியுறுத்துகின்றன. வேலன் என்று எழுதப்பெற்ற ஓடும், கோவேத் எனறு எழுதப்பெற்ற முத்திரையும் குறிப்பிடத்தக்கவை. முத்திரையில் தமிழ்ப்பிராமியுடன் சிந்து வெளிக்குறியீடுகளும் இருந்தன.

இதுவரை கூறியவற்றில் அகழ்வாய்வு தமிழர் வரலாற்றின் தொன்மையும் மாண்மையும் வெளிப்படுத்தும் பல்வேறு செய்திகளை உலகிற்கு அளித்துள்ளது. பல்வேறு நாடுகளில் வாணிகத்தின் பொருட்டுத் தமிழர்கள் வாழ்ந்ததையும் அகழ்வாய்வுச்சானறுகள் உறுதிப்படுத்துகின்றன. தமிழர் வரலாறும் இந்திய வரலாறும் துவக்கமடைய மேலும் பல அகழ்வாய்வுகள் நடைபெறுதல் அவசியம்.

# 3. அகழாய்வின் நோக்கங்களும் முறைகளும்.

## ( Objectives and Methods of Excavation)

**முன்னுரை :**

மண்ணுக்கடியில் மறைந்து கிடக்கும் பண்பாட்டுச் சின்னங்களை, அரிய பழமையான பொருள்களை அகழ்ந்து, வெளிப்படுத்துவதே அகழாய்வு ஆகும். இதனை அகழ்வாராய்ச்சி எனவும் அழைக்கலாம். அகழாய்வின் மூலம் ஒரு நாட்டின் நாகரீகம், பண்பாடு, வரலாறு ஆகியவற்றை அறிந்து கொள்கிறோம் நமது முன்னோர் பயன்படுத்திய பழம் பொருட்களைக் கொண்டு, அவர்களது சமுதாய, பொருளாதார, சமய வாழ்க்கை பற்றித் தெரிந்து கொள்ள முடிகிறது. வரலாற்றுக்காலத்திற்கு முற்பட்ட மக்களின் வாழ்க்கை முறை பற்றி அறிய உதவும் அகழாய்வு ஒரு நாட்டின் பண்டைய வரலாற்றை அரிய உதவும் ஆதாரங்களுள் தலைசிறந்து. அகழாய்வுகள் இந்திய வரலாற்றை எழுதப் பல அரிய செய்திகளைத் தந்துள்ளன.

கே.எம். கென்யான் என்னும் அறிஞர் பண்டைக் கால மக்கள் விட்டுச் சென்ற சான்றுகளின் அடிப்படையில் அவர்களது வாழ்க்கை முறைகளைப் பற்றியும், அம் மக்களது நாகரிகத்தைப் பற்றியும் எடுத்துரைக்கும் இயலே தொல்லியல்" என்றுக்கூறி தொல்லியலுக்கு நல்லதோர் விளக்கத்தைக் கூறியுள்ளார். பண்டைய மனிதன் விட்டுச் சென்ற சின்னங்கள் மண்ணுக்கடியில் கிடக்கின்றன. இவற்றை அகழாய்வின் மூலமே வெளிக் கொணர முடியும். வெளிக் கொணர்ந்த பொருள்களை அறிவியல் முறைப்படி ஆய்வு செய்ய வேண்டும்; மக்கள் வாழ்வைக் கணிக்க வேண்டும். இதனால் வரலாறு முழுமை பெறுகிறது. அகழாய்வின் நோக்கங்கள், முறைகள் பற்றி இத் தலைப்பில் காண்போம்.

**நோக்கங்கள் :**

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நாட்டில் சிறந்து விளங்கிய நாகரிகம் மறைந்து விடுகின்றது. மறைந்த அந்த நாகரிகத்தை வெளிக்கொணர அகழாய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன.

ஒரு நாட்டின் வரலாற்றை உருவாக்கப் பெருந்துணை புரிகின்ற கல்வெட்டுகள், செப்பேடுகள், நாணயங்கள் ஆகிய மூலங்களை அகழாய்வுகள் வெளிப்படுத்துகின்றன இவ்விதமாக வரலாற்றின் சான்றாதாரங்களை வெளிக் கொணரும் நோக்குடன் அகழாய்வுகள் நிகழ்த்தப் பெறுகின்றன.

உலகப்புகழ் பெற்ற அரச பரம்பரை ஒன்று ஓரிடத்தைத் தலைமையிடமாகக் கொண்டு பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு ஆட்சி புரிந்திருக்கலாம். கால வெள்ளத்தில் அக்கோநகர் மண்ணில் புதையுண்டு விட்டது. புதையுண் அம்மாநகரின் பெருமைகளை, சிறப்புகளை அறிந்து கொள்ளும் நோக்குடனும் அகழாய்வு நடத்தப்பெறுகின்றன. எடுத்துக்காட்டாக கங்கைகொண்ட சோழபுர அகழாய்வைக் குறிப்பிடலாம். அங்கு மன்னரின் மாளிகை, கோட்டை ஆகியவற்றின் சிதைந்த பகுதிகள் அகழ்ந்தெடுக்கப்பட்டன. பாஞ்சாலங்குறிச்சி அகழாய்விலும் அங்கு கோட்டைப் பகுதிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

சில இலக்கியச்செயதிகளை உறுதி செய்து கொள்வதற்காகவும் அகழாய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. எடுத்துக்காட்டாக சோழரின் துறைமுகப்பட்டினமான காவிரிப்பூம்பட்டினத்தில் புத்தவிகாரை இருந்ததாகவும் புத்த சமயத்தினர் நடமாட்டம் இருந்ததாகவும் தமிழிலக்கியச் சான்றுகள் கூறுகின்றன. அங்கே மத்திய தொல்பொருள்துறை அகழாய்வு நடத்தியதில், புத்தவிகாரை ஒன்று வெளிக் கொரணப்பட்டது.

அடுத்து சங்க இலக்கியங்கள் 'புகழ் மலி சிறப்பின் கொற்கை' என்று போற்றும் முத்துக் குளிக்கும் துறை முகமான கொற்கையின் முழுச்சிறப்பும் அகழ்வாய்வால் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இலக்கியங்கள் கூறும் செய்திகளில் எந்த அளவிற்கு உண்மை இருக்கிறது என்பதனைக் கண்டறியவும் அகழாய்வுகள் மேற்கொள்ளலாம்.

ஒரு நகரத்தின் பெருமையை அறிந்து கொள்ளவும், அந்நகரப் பகுதியில் பல்வேறு காலக்கட்டங்களில் ஆட்சிபுரிந்த அரசு வம்சங்கள் யாவை? என்பதனை அறிந்து கொள்ளவும் அகழாய்வு செய்யலாம். எடுத்துக்காட்டாக காஞ்சி மாநகரில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளைச் சுட்டலாம். பல்லவரின் புகழ்மிகு கோநகராகத் திகழ்ந்த காஞ்சி, பல்லவருக்கு முன்பே சாத்தவாகனரின் ஆட்சிக்குட்பட்ட செய்தியும், பல்லவருக்குப் பின்னர் அந்நகர் சோழர், பாண்டியர் விசய நகர வேந்தர் முதலான அரச வம்சத்தவர்களின் ஆட்சியையும் கண்டது எனும் பேருண்மையும் காஞ்சி அகழாய்வாய்வால் புலனாகின்றன.

ஒரு குறிப்பிட்ட அரச வம்சத்தின் தலைநகரம் யாது? என்பதனைக்கண்டறியுவும் அகழாய்வு பயன்படுகிறது. எடுத்துக்காட்டாகச் சங்க காலச் சேரரின் தலைநகரம் திருவஞ்சைக்களமா? கரூர் மாவட்டத்துக் கருவூரா? எனும் சர்ச்சை ஏற்பட்டது, மத்திய தொல்பொருள்துறை கிராங்கனூரில் (திருவஞ்சைக் களத்தில்) அகழாய்வு மேற்கொண்டது. கி.பி. எட்டாம் நூற்றாண்டுவரை அங்கு மக்கள் வாழ்ந்ததற்கான தடயங்களே கிடைக்கவில்லை. ஆனால் கருவூரில் தமிழ்நாடு தொல்லியல்துறை நடத்திய அகழாய்வுகளில் கருவூருக்கு ஆதரவாகச் சில தடயங்கள் கிடைத்தன. இதனால் கருவூரே சங்கச் சேரரனின் தலைநகர் எனக்கருத முடிகிறது.

பண்டைய மக்களின் வாழ்க்கைமுறை, பண்பாடு, அவர்கள் அன்றாட வாழ்வில் பயன்படுத்திய மட் கலன்கள், உலோகப் பொருள்கள், கருவிகள், மொழி, எழுத்து, வழிபட்ட தெய்வம், அவர்களது சமய நம்பிக்கை, தொழில்உணவு தானியங்கள், மண்ணியல் தன்மை, சுற்றுச்சூழல், பொழுதுபோக்கு முதலான பல்வேறுபட்ட செய்திகளை அறிந்து கொள்ளவும் அகழாய்வு மேற்கொள்ளப்படுகின்றன. பண்டைய மனிதனின் உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம், கடல்கடந்த நாடுகளுடன் கொண்டிருந்த தொடர்பு ஆகியவற்றை அறியவும் அகழாய்வு நடத்தப்படுகின்றது. பண்டைய மனிதன் பயன்படுத்திய பொருள்கள் யாவை? என்ப தனைத் தெரிந்து கொள்ளவும் அகழாய்வு துணைபுரிகின்றது எடுத்துக்காட்டாக நம் நாட்டில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் பாய்மரக்கப்பல், உரோமனியச் சீனக் காசுகள், நிறுத்தல், முகத்தல் அளவைகள், பல வகையான மட்பாண்டங்கள், தாயக்கட்டைகள், சதுரங்கம், கோதுமை, நெல், பார்லி, விலையுயர்ந்தமணி வகைகள், சுடுமண் பொம்மைகள், மனிதனின் எலும்புக்கூடுகள், ஆகியன கிடைத்துள்ளமை மேற்கூறப்பட்ட செய்திகளுக்கு அரண் சேர்க்கின்றன,

மேற்கூறியவற்றான் பண்டைய நாகரிகங்களைப் பற்றி அறிந்துகொள்ளும் நோக்குடனும்,பன்டைய மனித இனத்தின் பண்பாட்டை அறியவும்,பழைய அரசுகள்,நரகங்கள் பற்றி அறிந்து கொள்ளும்நோக்கத்துடலும் அழ்வாய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன என்பதனை அறியலாம். பண்டைய மனிதனின் வாழ்க்கை முறை மட்டுமின்றி, அவனது சமய நம்பிக்கை, உடை, அணிகலன், கைத்தொழில், கலை, அவன் வளர்த்த விலங்குகள், பறவைகள் முதலான இன்னோரன்ன செய்திகளை அறிந்து கொள்ளும் பொருட்டும் அகழாய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன.

## ஆ. அகழாய்வின் வகைகள்(Types of Excavation) :

மண்ணுக்கடியில் புதையுண்டு கிடக்கும் பழங்காலப் பொருட்களை (கருவிகள், கட்டடங்கள் மட்பாண்டங்கள், காசுகள்) அறிவியல் முறைப்படித் தோண்டி எடுத்து, அவற்றைப்பற்றி ஆய்வு செய்வதே அகழ்வாய்வின் முக்கிய நோக்கமாகும். அகழாய்வு முறைகள் இடத்திற்கு இடம் மாறுபடுகின்றது. அகழாய்வு செய்யவேண்டிய இடத்தின் தன்மைக்கும் அமைப்பிற்கும் ஏற்ப அகழாய்வு முறைகளும் வேறுபடுகின்றன.

அகழாய்வு என்பது கிணறு வெட்டுவது போன்று வேகமாக வெட்டி, மண்ணைக்குழியினின்றும் அப்புறப்படுத்துவது அன்று. தொல்லியல் அகழாய்வு, என்பது சிறிய களைக்கொத்துக்களைக் கொண்டு, மெல்ல மெல்ல கொஞ்சம் கொஞ்சமாக நிலப்பரப்பைத் தோண்ட வேண்டும். தோண்டிய மண்ணின் கட்டிகளை உடைத்துத் தூளாக்கி, அவற்றில் பழம்பொருட்கள் ஏதேனும் இருக்கிறதா என்பதனை சளித்துப் பார்த்தல், அதில் கிடைக்கும் அரிய பொருள்களைப் பற்றிக் ஆய்வு செய்தல் ஆகும். இப்போது நாம் அகழாய்வின் வகைகள் பற்றிக் காண்போம்.

அகழாய்வில் பொதுவாக இரண்டு முறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. அவை

1. பரவலாகத் தோண்டும் முறை அல்லது பக்கவாட்டு அகழாய்வு (Horizontal Excavation)
2. ஆழமாகத் தோண்டும் முறை அல்லது செங்குத்தான அகழாய்வு (Vertical Excavation)

பக்கவாட்டு அகழாய்வு, பெரும்பரப்பு அகழாய்வு (Large Scale Excavation) எனவும் அழைக்கப்பெறுகிறது.

மேற்கூறப்பட்ட இருமுறைகளே அன்றி சுற்றகழாய்வு முறை (Block Method) சவக்குழி அகழாய்வுமுறை, குகை அகழாய்வு, ஆழ்கடலாய்வு ஆகிய முறைகளும் தொல்லியல் ஆய்வில் ஆய்வில் பின்பற்றப்படுகின்றன. இவ்வகழ்வாய்வு முறைகளை ஒன்றன்பின் ஒன்றாகக் காண்போம்.

## பரவலாகத் தோண்டும் முறை :

பழம்பெரும் நாகரிகம் ஒன்று நிலப்பரப்பில் புதையுண்டிருக்கும். அப்போது பரவலாகத் தோண்டும் முறை பின்பற்றப்படுகிறது. பழங்கால மக்கள் வாழ்ந்து வந்த இடங்களுள் பெரும்பாலானவை மண்மேடாகக் காட்சி தருகின்றன. இது போன்ற இடங்களில் பரவலாகத் தோண்டும் முறையே சிறந்தது. இம்முறையில் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குரிய பண்பாட்டுச் சின்னங்களை ஒரே இடத்தில் பெருமளவில் காண வாய்ப்புகள் உள்ளன. அடுத்து பரவலான வகையில் நிலப்பரப்பை அகழ்ந்து பார்க்குங்கால், ஓரிடத்தில் கிடைக்கப்பெறாத தடயம் வேறோர் இடத்தில் கிடைக்கலாம். புதையுண்டு கிடக்கும் அரண்மனைகள், கோட்டைகள், ஏரிகள், வீதிகள், போன்றவற்றை முழுமையாக எளிதாகக் கண்டுபிடிக்க இம்முறையே சாலச் சிறந்தது. எடுத்துக்காட்டாக இம்முறையில்தான் உறரப்பா, மொகஞ்சாதாரோ, தட்ச சீலம், முதலான இடங்களில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

### நன்மைகள் :

இம்முறையின் மூலம் ஒரு பழமையான நாகரிகத்தின் பல தரப்பட்ட அம்சங்களையும் முழுமையாக அறியலாம். எடுத்துக்காட்டாக சிந்து வெளிநாகரிகத்தின் நகரமைப்பு, நீத்தார்மேடு, நீந்து குளம் தானியக் களஞ்சியம், பெரு மண்டபம் ஆகியவற்றை அகழ்ந்தெடுத்துள்ளமையைக் குறிப்பிடலாம்.

**ஆழத்தோண்டும் முறை (செங்குத்தான அகழாய்வு) :**

ஒரு நகரத்தின் அல்லது ஒரு ஊரின் எல்லாப் பகுதிகளையும் அகழ்ந்து பார்ப்பதற்குப் பதிலாக, ஓரிரு இடங்களில் மட்டும் சிறிய அளவில் குழிகளை ஆழமாகத் தோண்டி, ஆய்வு செய்வதே, ஆழத்தோண்டும் முறை ஆகும். இவை செங்குத்தாகத் தோண்டப்படுவதால் செங்குத்தான அகழாய்வு முறை எனப்படுகிறது. இதில் இயற்கையான பாறை அல்லது கன்னிமண் (Virgin Soil) அதாவது இயற்கை மண் (Natural Soil) வரும் வரையில் அடியில் தோண்டவேண்டும். இம்மாதிரிக்குழிகள் சதுர வடிவிலோ, செவ்வக வடிவிலோ இருக்கலாம். தொல்லியலைப் பொருத்துமட்டில் ஆழத்தோண்டும் முறையே சிறந்தது.

ஆழத்தோண்டும் போதுதான் பல்வேறு மண் அடுக்குகளைப் பிரித்து அவற்றின் காலத்தை வரையறுத்து, அவை உணர்த்தும் பண்பாட்டுச் சிறப்பினை அறிய முடியும். அதனைப் போன்று குழிகளில் கிடைக்கும் பழம்பொருட்களின் காலத்தையும் அவற்றிற்குரிய மண் அடுக்குகளுடன் இணைத்துக் கால வரம்பை அறிய முடியும். இதனால் பழம்பொருளின் உண்மையான காலத்தை நாம் வரையறுத்துக் கூற ஏலும்.

தோண்டப்பட்ட மாதிரிக் குழியில் (Trial Trench) எதிர்பார்த்த அளவு பழம்பொருள் கிடைக்காத சமயத்தில், மண்ணடுக்குகள் சிதைவுற்று இருக்கும் சமயத்தில், அடுத்து மக்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் ஏதும் கிடைக்காத சமயத்தில், இதற்குச் சற்றுத் தொலைவில் வேறொரு மாதிரிக்குழியைத் தோண்டி ஆய்வு செய்ய வேண்டும்.

**நன்மைகள் :**

மேற்பரப்பு ஆய்வின் மூலம் ஆய்வு செய்யுங்கால் ஓரிடத்தைப் பற்றிய சிறப்பான செய்திகள் கிடைக்காத சமயத்தில்

அவ்விடத்தில் மாதிரிக் குழிகளை அமைத்து ஆழமாகத் தோண்டினால் பல உண்மைகள் வெளிப்படலாம். அடுத்து குறுகிய கால அவகாசத்தில் அகழாய்வை முடிக்க வேண்டுமெனில் ஆழத்தோண்டும் முறையே உகந்ததாகும். பணியாட்கள் தேவையான அளவில் கிடைக்காமல் போகின்ற சமயத்திலும் மாதிரிக் குழிகளை அமைத்து அகழ்ந்து பார்ப்பதே நல்லது.

குறைபாடு :

குறுகிய அளவிலான நிலத்தில் அகழாய்வு செய்வதால், ஒரு குறிப்பிட்ட காலப் பகுதிக்குட்பட்ட ஒரு பண்பாட்டின் அனைத்துக்கூறுகளையும் அறிய முடியாது. அரண்மனைகள், திருக்கோயில்கள், பெரிய கட்டடங்கள், சுவர்கள் போன்றவற்றை இம்முறையின் மூலம் தோண்ட அதிக உழைப்பும் அதிக பணச்செலவும் ஆகலாம். சில குறைகள் இருந்தாலும் ஆழத்தோண்டும் முறையே தொல்லியலுக்குக்கந்தது.

சுற்றகழாய்வு : (Block Methid)

மாதிரிக் குழி அகழாவாயவினின்றும் இது சற்று மாறுபட்டது. மாதிரிக்குழி அகழ்வாய்வில் செங்குத்தாக ஒரு சிறு பகுதியை கன்னி மண் வரையிலும் அகழ்கின்றனர் சுற்றகழாய்வு முறை என்பது நாம் ஆய்வு செய்ய இருக்கும் பகுதியைச் சுற்றி நான்கு புறமும் கால்வாய் வெட்டுவது போல், ஒரு குறிப்பிட்ட அகலத்தில் அகழ்ந்து ஆய்தல் ஆகும். இதிலும் கன்னி மன வரையில் அகழ்ந்து பார்க்கிறோம், இதில் நடுவிடம் ஒரு தனி மேட்டுத்துண்டாக நின்று விடுகிறது. இதன் நான்கு வெட்டுப் பகுதிகளிலும் காணப்படும் மண்ணடுக்குகளைக் கோடிட்டுத் தனியாகக் காண்பிக்க வேண்டும். பின்னர் இம் மேட்டுப் பகுதியை மேலிருந்து கீழாக ஒவ்வொரு மண்ணடுக்காகப் பெயர்த்து ஆய்வு செய்தல் வேண்டும். இது போன்ற ஆய்வே சுற்றகழாய்வு என அழைக்கப்படுகிறது.

இம்முறையில் பல குறைபாடுகள் உள்ளன. முதலாவதாக இது சிக்கனமானது அல்ல. அதிக பணச்செலவை ஏற்படுத்தும். இரண்டாவதாக இதில் காலமும் விரையம் ஆகிறது. இம்முறையில் ஒரு குழி போடுவதற்குள், பல மாதிரி குழிகளை (Trial Trenches)ஆழமாக வெட்டி அகழாய்வினை முடித்து விடலாம்.

இது அகலத் தோண்டும் முறை போன்று காணப்பட்டாலும், பெரும்பரப்பு அகழாய்விற்கு இம்முறைப் பயன்படாது.

## நீள்குழி அகழாய்வு :

பெரியதோர் நிலப்பரப்பில் மிகவும் நீண்ட குழியாக அமைத்து ஆய்வு மேற்கொள்வதே நீள்குழி அகழாய்வு ஆகும். எடுத்துக்காட்டாக மிகவும் பரந்துபட்ட ஒரு பழைய மண் மேட்டை அகழாய்வு செய்ய வேண்டும் என்று வைத்துக்கொள்வோம். இதில் பெரும்பரப்பு அகழாய்வை மேற்கொண்டால் அதிக பண விரயமும் கால விரயமும் ஏற்படும். இதற்கு மாறாக இம்மண் மேட்டின் குறுக்கே கால்வாய் போன்றதோர் நீண்டகுழியை அமைத்து அகழாய்வு. செய்தால் அம்மேட்டுப் பகுதியில் புதைந்து கிடக்கும் நாகரிகத்தைப் பற்றிய சில உண்மைகள் புலப்படும். அடுத்து எந்தப் பகுதியில் மக்கள் தொடர்ந்து வாழ்ந்தனர் என்பதையும் அறிந்து கொள்ளலாம்.

## குகை அகழாய்வு :

கற்கால மனிதன் குகைகளில் வாழ்ந்தான். இக்குகைகளில் அவன் விட்டுச் சென்ற எச்சங்கள் அதிகம். இக்குகைகளை முறைப்படி அகழ்ந்து ஆய்வு செய்வதே குகை அகழாய்வு ஆகும். மற்ற இடங்களில் ஆய்வு செய்வதற்கும் குகைகளில் ஆய்வு செய்வதற்கும் சில வேறுபாடுகள் உண்டு.

பெரிய குகையாக இருப்பின் அகழாய்வு செய்வது எளிது. காரணம் அங்கு வெளிச்சமும் போதிய இட வசதியும் இருக்கும்

இங்கு மாதிரிக் குழிகளை அமைத்து குகையின் அடிமட்டம் வரை அகழ்ந்து ஆய்வு செய்ய முடியும். குகைகளுக்குள் அகழாய்வு செய்யும் போது சற்று கவனமாகவும் செய்ய வேண்டும். அகழாய்வின் போது சிறிய கத்தி. சுரண்டி போன்ற சிறு கருவிகளையே பயன்படுத்த வேண்டும். மண்வெட்டி போன்றவற்றைப் பயன்படுத்தலாகாது.

குகை சிறியதாயிருப்பின் சற்று சிரமமாகத் தான் இருக்கும். காரணம் போதிய மின் வசதி செய்து கொள்ள வேண்டும். சிறிய குகையில் ஆய்வுக் குழிகளை சிறியதாகவே அமைக்க வேண்டும். ஆய்வுக் குழியின் ஓரத்தில் ஆப்புக் குச்சிகள் அடிக்க வசதியில்லாதிருப்பின், குகையின் உட்புறச் சுவரிலேயே எண்களைக் குறிக்கலாம்.

குகை ஆய்வுகளில் கற்காலக் கருவிகள் மட்டுமின்றி, கற்கால மனிதன் உண்ட விலங்குகளின் எலும்புகள், மனித எலும்புகள், அடுப்புகள் இருக்கலாம். இவை மண்ணடுக்குகளில் காணப்படின், இவற்றைத் தெளிவாக்ப் புகைப்படம் எடுக்கலாம். அவற்றின் காலத்தையும் சரியாகக் கணிக்கலாம்.

குகை அகழாய்வில் பல இடையூறுகளும் ஆபத்துகளும் உண்டு. உடல் நலனும் பாதிக்கப்படலாம். எனவே இப்பகுதியில் வட்ட வடிவமான குழிகளைத்தோண்டி அகழ்ந்து பார்த்தல் வேண்டும்.

## சவக்குழி அகழாய்வு :

பண்டைய மனிதனது உடல் புதைக்கப்பட்ட இடமே சவக்குழி ஆகும். இவற்றுள் (Cairn Circle) கற்கிடை கல்றைகள் (Cist Burijals) நீண்ட புதைகுழிகள் (Extended Pit Burials) முதலான பலவகைகள் உள்ளன. மற்ற இடங்களில் அகழாய்வு

செய்வது போன்று இங்கே ஆய்வு செய்ய முடியாது. சற்று மாறுபட்ட முறையையே இங்கு பின்பற்ற வேண்டும். மேற்குறிப்பிட்டுள்ள சவக்குழிகள் ஒவ்வொன்றும் வேறுபட்ட அமைப்பு கொண்டவை. எனவே அகழாய்வு முறைகளும் வேறுபடும். எடுத்துக்காட்டாக கற்கிடை எனும் சவக்குழியை எவ்வாறு ஆய்வு செய்வது என்பதைக் காண்போம்.

கல்லறைகள், நீண்ட புதை குழிகள் ஆகியவைற்றை ஆய்வு செய்யும்போது மேற்கூறப்பட்ட வட்ட வடிவக் குழிக்குப் பதிலாக, சிறுபரப்பு ஆய்வு மேற்கொள்ளத் துணைபுரியும் செவ்கவ வடிவில் குழிகளை அமைத்து அகழாய்வினை மேற்கொள்ளலாம்.

இவற்றை மிகுந்த முன்னெச்சரிக்கையுடன் ஆய்வு செய்ய வேண்டும். காரணம் சவக்குழியில் உள்ள எலும்புக் கூடுகள் சிதைக்கப்படாமல் எடுக்கப்பட வேண்டும். சவக் குழியில் வைத்து புதைக்கப்பட்டுள்ள மற்ற பொருட்களையும் பத்திரமாக எடுக்க வேண்டும். அவசரத்தில் கலைத்து விடக்கூடாது. சவக் குழி அகழாய்வின் மூலம் மனிதனின் பொருளாதார ஏற்றத்தாழ்வு, அடக்கம் செய்யும் முறை, வழிபாட்டு முறை, தாழிகளின் வகைகள், அமைப்பு முதலானவற்றை அறிந்து கொள்ளலாம். மண் பாண்டத் தொழிலாளியின் கலைத்திறனும் இதனால் புலப்படும்.

இதனைச் செங்குத்து அகழாய்வு செய்யும் முறையில் ஆய்வு செய்ய முடியாது. சதுரக் குழி, செவ்வகக் குழி, ஆகியவையும் பயன்படாது. காரணம் கற்கிடையைச் சுற்றிலும் நிலத்தின் மேற்பரப்பில் வட்டமாகக் கற்கள் பரவலாகக் கிடக்கும்.

### தண்ணீருக்கடியில் அகழாய்வு :

ஆழ்கடலாய்வு (Under Sea Exploration) பண்டைக் காலத்தில் சிறப்புடன் விளங்கிய சில நகரங்கள், துறைமுகங்கள், கடலின் கொந்தளிப்பால், கடலின் சீற்றத்தால், கடல் நீரால்

விழுங்கப்பட்டுவிட்டன. கடலுக்கடியில் மூழ்கிக் கிடக்கும் இவற்றை அண்மைக்கால நவீன கருவிகள் மூலம் அகழ்ந்து வெளிக் கொண்டு வருவதையே, நீருக்கடியில் அகழாய்வு என்பர். இதனை ஆழ் கடலாய்வு எனவும் அழைப்பர். நீருக்கடியில் செய்யும் அகழாய்வு நிலப்பரப்பில் மேற்கொள்ளப்படும் அகழாய்வினின்றும் வேறுபட்டது. அதிக செலவு பிடிக்கக் கூடியது. தமிழிலக்கியங்களின் மூலம் குமரிக் கண்டம், கபாடபுரம், தென்மதுரை, பூம்புகார் ஆகியவை கடல் கோள்களால் அழிந்தமை பற்றி அறிகிறோம். இவற்றை வெளிக் கொணரும் முயற்சிகளின் முதல் கட்டமாக பூம்புகாரில் ஆழ்கடல் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

சங்க காலச் சோழரின் சீர்மிகு கோநகராகவும் சிறப்புமிகு துறைமுகப் பட்டினமாகவும் விளங்கிய பூம்புகார்க் கடற்கரையை ஒட்டி முதல் கட்டமாக 1981 ஆம் ஆண்டு ஆழ்கடலாய்வு தொடங்கப்பட்டது அடுத்து 1991 ஆம் ஆண்டிலும் அதன் பின்னர் இவ்வாய்வு தொடர்ந்தது. கோவாவில் உள்ள தேசியக் கடலாய்வு நிறுவனமும் தமிழ்நாட்டரசு தொல்பொருள் ஆய்வுத் துறையும் இணைந்து இதனை மேற்கொண்டது.

இதில் சைடு ஸ்கேன் சோனார் (Side Scan Sonar) எக்கோ சவுண்டர் (Echosounder) புரோடான் மேக்னட்டா மீட்டர் (Proton Mageneto - Metre) முதலான நுண்ணிய விஞ்ஞானக் கருவிகள் பயன்படுத்தப்பட்டன. சி.எஸ்.ஐ.ஆர். அறிவியல் குழுவினர் கடற்கரையில் இருந்து 41\2 கி.மீ. தொலைவில் கப்பகரப்பு என்னுமிடத்தில் மூழ்கிக் கிடந்தடபில்யூ பிளாக் கெட் என்னும் ஆங்கிலக் கப்பலைக் கண்டறிந்தது.

கண்ணகி சிலைக்கு எதிரே கடலில் கட்டடப் பகுதிகள் கண்டுபிடிக்கப்பட்டன. கட்டடச் சுவரின் அகலம் 1 முதல் 2 மீட்டர் வரை உள்ளது. 6 மீட்டர் உயரமும் 20 மீட்டர் நீளமும் 15 மீட்டர்

அகலமும் கொண்ட கட்டடப் பகுதி ஆய்வில் கண்டறியப்பட்டது. பயிற்சி மிக்க அயல்நாட்டு மூழ்குநர்கள் இதில் அமர்த்தப்பட்டனர். மிக விரைவில் பூம்புகார் நகரின் பெரும்பகுதியும் கண்டுபிடிக்கப்படும் என நம்பலாம். மேலும் பல தடயங்களும் கிடைக்கலாம்.

# 4.அகழாய்வு முறை

## முன்னுரை :

அகழாய்வுக்குரிய இடத்தினைத் தேர்வு செய்த பின்பு, அந்த இடத்தைப்பரப்பாய்வு செய்தல் வேண்டும். பின்னர் வரைபடம் ஒன்றைத் தயாரித்தல் வேண்டும். அதில் அப் பகுதியில் உள்ள நினைவுச் சின்னங்கள் திருக்கோயில்கள், சாலைகள், அகழாய்வு செய்யப்படும் இடம் ஆகியவற்றைக் குறித்திடல் வேண்டும். வரைபடங்கள் தயாரான பின்னர், அகழாய்வு செய்யப்பட உள்ள பகுதியைப் புகைப்படம் எடுக்க வேண்டும். அகழாய்வு நெறிமுறைப்படித்தான் அகழாய்வு செய்தல் வேண்டும்.

## ஆய்வுக்குழியை அமைத்தல், ஆய்வு செய்தல் :

ஆய்வு செய்ய வேண்டிய இடத்தை அளந்து, அதன் நான்கு மூலைகளிலும் ஆப்புகளை அடிக்க வேண்டும். குழிகள் செவ்வக வடிவிலோ சமச்சதுர வடிவிலோ இருக்கலாம், எடுத்துக்காட்டாக 5மீ - 4மீ செவ்வகக் குழியை அமைப்பதாகக் கோள்வோம். இப்போது நீளப்பக்கத்தில் ஒரு மீட்டருக்கு ஒரு ஆப்பினை மேலும் அடிக்க வேண்டும். ஆக இப்போது நீளப் பக்கத்தின் இரு மருங்கிலும் பத்து ஆப்புகள் இருக்கும். இப்போது இவற்றிற்கு எண்கள் தர வேண்டும்.நீளப்பக்கம் தெற்கு வடக்காகவும் அகலப்பக்கம் கிழக்கு மேற்காகவும் இருப்பதாகக் கொள்வோம். எனவே தெற்கில் உள்ள முதல் அடுத்த ஆப்பில் தொடங்கி முறையே 0 I, II, III, IV, V, என்று எண் இட வேண்டும். இவற்றின் எதிர்புறமுள்ள ஆப்புகளுக்கு 0,1, 2, 3, 4, 5, என்று எண் இட வேண்டும். இப்போது தெற்குப் பக்கம் குறியீடற்ற பக்கமாகவும் (Non Dash Side) வடக்குப்பக்கம் குறியீட்டுப் பக்கமாகவும் (Dash Side) கருதப் பெறும்.

பின்னர் ஆப்புகளை ஓட்டி ஆய்வுக் குழியின் தென் வடல் உள் பக்கங்களில் அரை மீட்டர் இடைவெளி விட்டு மூலைக்கு ஒன்றாக நான்கு ஆணிகளை அடித்து, இவற்றை இணைக்கும் வகையில் நூற்கயிற்றைக் கட்ட வேண்டும். இப்போது 5மீ-4மீ. செவ்வகப் பகுதி கிடைக்கும். இப்பகுதி அகழாய்விற்காகத் தயார் நிலையில் உள்ளது.

தோண்டிச் செல்லும் போது மண்ணின்நிறம் மாறுபட்டால் அத்துடன் நிறுத்திவிட்டு, அதே பரப்பளவில் உள்ள மற்ற பகுதிகளையும் அகழ்ந்து விட்டு, சுவற்றில் பாள நிலையைக் கத்தியால் கீறிக் கோடிட்டுக் காட்ட வேண்டும். முதல் மண்ணடுக்கு முடிந்தவுடன் இரண்டாவது மண்ணடுக்குப் பகுதிகளை, மூன்றாவது மண்ணடுக்குப் பகுதிவரும் வரை உள்ள மண்களைச் சீராகத் தோண்டி ஒரு சதுரத்திலிருந்து மறு சதுரத்திற்குச் செல்ல வேண்டும். ஆங்காங்கு கிடைக்கும் மட்பாண்டங்களின் ஓடுகளைப் பொறுக்கி தண்ணீரில் நன்கு கழுவி, பானை ஓடுகள் கொட்டிலில் (Potterty yard) வகைப்படுத்தி, ஒவ்வொரு மண்ணடுக்களுக்கும் உள்ளனவற்றைத் தனித்தனியாகக் கொட்டிவைக்க வேண்டும். நல்ல மாதிரிகளைத் தனியே எடுத்து உறையில் குறிப்பெழுதிப்போட வேண்டும். ஒவ்வொரு மண்ணடுக்கிலும் எத்தனை வகை ஓடுகள் கிடைக்கின்றன, எந்த மண்ணடுக்கில் அதிகமாகக் கிடைக்கிறது? அதன் காலம் யாது? என்பதையும் கணித்தல் வேண்டும்.

ஒவ்வொரு நாள் அகழ்வாய்வின் முடிவின் போதும் குழியின் அடிப்பகுதியையும் சுவரின் ஓரப் பகுதியையும் துடைப்பான் (Brush) கொண்டு சுத்தப்படுத்தி, பாள நிலைகளுக்கு மேலிருந்து கீழாக 1, 2, என்று எண் இட வேண்டும். பிறகு ஏணியின் துணை கொண்டு மேலே ஏறிவர வேண்டும். இவ்வாறு தொடர்ந்து படிப்படியாக அகழாய்வு செய்த பின், குழி கீழே சென்று

விடும். அப்போது குழியிலிருந்து மண்ணை மேலே கொண்டு வருவது கடினமாக இருந்தால் கீழிருந்து மேலே ஏறிவர படிகளை வெட்டிக் கொள்ளலாம்.

குழிகளில் கிடைக்கின்ற பொருள்களை அந்த அந்த மண்ணடுக்கு மட்டத்தில் வைத்து, அருகில் அளவு கோலையும்(Scale) வைத்து புகைப்படம் எடுக்க வேண்டும். கட்டடம், சுவர் தென்பட்டால் அவற்றின் மேல் பரப்பை சுத்தம் செய்து புகைப்படம் எடுக்க வேண்டும், பின்னர் சுவரின் ஒரு புறம் மட்டும் அகழ்ந்து கொண்டே செல்ல வேண்டும். கட்டடம் குழியை விட்டு வெளியிலும் நீண்டு சென்றால் குழியை நாம் ஒவ்வொரு மீட்டராக விரிவு படுத்தவேண்டும். கட்டடச்சுவரின் அடிப்பகுதி தோண்டி வரை அவற்றை வெளிப்படுத்த வேண்டும். கட்டடத்தின் நீளம், உயரம் அகலம், செங்கற்களின் அளவுகள் ஆகியவற்றை அவ்வப்போது குறித்து வைக்க வேண்டும்.

இவ்விதமாக ஒவ்வொரு மண்ணடுக்குகளையும் படிப்படியாகத் தோண்டிக் கொண்டே கன்னி மண் (Virgin Soil) உள்ளவரைத் தோண்ட வேண்டும் முற்கால மக்கள் வாழ்ந்த குழி வீடுகள் (Pit Dwellings), பண்டைய மண்வீடுகள் தென்பட்டால் எஞ்சியுள்ள அதன் அடித்தளங்களை (Foundation) க் கவனமாக அகழ்ந்து, குச்சி நடு குழிகள் (Post Holes) ஆகியவற்றைத் தெளிவுறக் காட்ட வேண்டும். புகைப்படம எடுக்க வேண்டும். தளப் பரப்பில் காணப்படும் அடுப்பு, பழம் தட்டுமுட்டு சாமான்கள் ஆகியவற்றையும் இடம் மாறாமல் வைத்து புகைப்படம் எடுக்க வேண்டும்.

இன்று வரை தமிழ்நாட்டில் நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆய்வு செய்யப்பட்ட முக்கியமான இடங்களும் அவை அடங்கியுள்ள மாவட்டப்

பெயர்களையும் கீழே காண்போம். பழைய மாவட்டப் பெயர்களே தரப்பட்டுள்ளன.

**திருநெல்வேலி மாவட்டம்**

| | |
|---|---|
| | 1. ஆதிச்சநல்லூர் |
| | 2. உக்கிரன்கோட்டை |
| | 3. பாஞ்சாலங்குறிச்சி |
| சிதம்பரனார் மாவட்டம் | 4. கொற்கை |
| இராமநாதபுரம் மாவட்டம் | 5. அழகன் குளம் |
| மதுரை மாவட்டம் | 6. கோவலன் பொட்டல் |
| | 7. கல்லுப்பட்டி |
| தஞ்சை மாவட்டம் | 8 கம்பர் மேடு |
| | 9. வல்லம் |
| | 10. குரும்பன் மேடு |
| | 12. தாராசுரம் |
| நாகப்பட்டினம் மாவட்டம் | 13. பூம்புகார் கடற்கரையில் ... பூம்புகார் கடலில் |
| திருச்சிராப்பள்ளி மாவட்டம் | 14. உறையூர் |
| | 15. அலகரை |
| | 16. கண்ணனூார் (சமயபுரம்) |
| கரூர் மாவட்டம் | 17. கரூர் |
| | 18. திருக்காம்புலியூர் |
| பெரம்பலூரார் மாவட்டம் | 19. கங்கை கொண்ட சோழபுரம் |
| கோவை மாவட்டம் | 20. பேரூர் |
| | 21. ஆனை மலை |
| | 22. போளுவாம்பட்டி (முட்டம்) |
| தென்னார்க்காடு மாவட்டம் | 23. திருவக்கரை |
| | 24. திருவாமாத்தூர் |

| | |
|---|---|
| | 25. குடிக்காடு |
| | 26. செங்கமேடு |
| | 27. கொரிமேடு |
| | 28. சுட்டுக்கேணி |
| | 29. நத்தமேடு |
| | 30. முத்திரப்பாளையம் |
| வட ஆர்க்காடு மாவட்டம் | 31. பையம்பள்ளி |
| | 32. அப்புக் கல்லு |
| | 33. கல்லோரி மலை |
| தர்மபுரி மாவட்டம் | 34. மல்லப்பாடி |
| | 35. கட்டூர் |
| | 36. குட்டூர் மலை |
| | 37. பனைய குலம் |
| | 38. அதியமான் கோட்டை |
| செங்கற்பட்டு மாவட்டம் | 39. பல்லவர்புரம் |
| | 40. அத்திரம்பாக்கம் |
| | 41. வடமதுரை |
| | 42. குடியம் |
| | 43. வசுவ சமுத்திரம் |
| | 44. பல்லவமேடு |
| | 45. குன்னத்தூர் |
| | 46. சானூர் |
| | 47. பெரும்பேரூர் |
| | 48. காஞ்சி |
| | 49. அமிர்த் மங்கம் |
| | 50. கிருஷ்ணாபுரம் |

# மட்பாண்ட வகைகளும் அவற்றின் முக்கியத்துவமும்
## (Types of Pottery And Their Importance)

**முன்னுரை :**

பண்டைக்கால மக்கள் அன்றாட வாழ்வில் மட்பாண்டங்களையே எல்லாவற்றிற்கும் பயன்படுத்தினர். எனவே மட்பாண்டங்கள் அந்த அந்த பண்பாட்டினைப் படம் பிடித்துக் காட்டும் காலக் கண்ணாடிகளாகக் கருதப்படுகின்றன. உலகின் எப் பகுதியில் அகழாய்வு நடத்தினாலும், அங்கெல்லாம் மட்பாண்டங்களும், மட்பாண்டத் துண்டுகளும் அதிக அளவில் கிடைக்கின்றன. எனவே தான் அகழாய்வுக் குழியின் அருகில் மட்பாண்டக் கொட்டில் ( Pottery Yard ) ஒன்றினை அமைத்து அவற்றில் மட்பாண்டங்களைக் கொட்டி வைக்கின்றனர். அவற்றைச் சுத்தப்படுத்தி, வகைப்படுத்தி ஆய்வு செய்கின்றனர். இதனால் தொல்லியல் அகழாய்வில் மட்பாண்டங்கள் முக்கியமானதோர் இடத்தைப் பெற்றுள்ளமை புலனாகும். பண்டைய மனிதனால் பயனற்றது என்று தூக்கி எறியப்பட்ட மட்பாண்ட ஓடுகள் இன்றைய தொல்லியல் ஆய்வாளர்களால் தேவையானது என்று பொறுக்கி எடுக்கப்பட்டு, பத்திரப்படுத்தப்படுகிறது. எனவே மட்பாண்டங்களே தொல்லியலின் உயிர் நாடி எனலாம்.

**வகைகள் :**

பழங்கால மட்பாண்டங்களை நாம் பல பிரிவுகளாகப் பகுக்கலாம். அவற்றை இந்திய மட்பாண்ட வகைகள் என்றும் அயல்நாட்டு மட்பாண்ட வகைகள் என்றும் இரு பிரிவுகளாகப் பகுத்து ஆயலாம். அயல்நாட்டுப் பிரிவில் உரோமானிய சீன வகைகள் இரண்டும் அடங்கும்.

இந்திய மட்பாண்ட வகைகளுள் 1. கறுப்பு வண்ணம் பூசப்பட்ட சிவப்பு மட்பாண்டங்கள் 2. பழுப்பு நிற மட்பாண்டங்கள் அல்லது சாம்பல் நிற மட்பாண்டங்கள். 3. கறுப்பு சிகப்பு நிற மட்கலன்கள் ( Black and Red ware ) 4. வட இந்திய பளபளக்கும் கறுப்பு மட்கலன்கள் ( Northern black Polished Ware ) 5. கறுப்பு நிற மட்கலங்கள் ( All Black Ware ) 6. காவிக் கலவை பூசப்பட்ட மட்கலன்கள் ( Russet Coated Pottery ) 7. சிகப்பு நிற மட்கலன்கள் ( Red Ware ) 8. கருஞ்சிவப்புக் கலவை பூசப்பட்ட மட்கலன்கள் ( Bright Red Ware ) முதலான பிரிவுகள் உள்ளன. சில மட்கலன்களில் எழுத்துக்களும் மற்றும் சில மட்கலன்களில் குறியீடுகளும் ( Graffiti Marks ) பொறிக்கபபடுள்ளன.

உரோமானிய மட்கலன்களுள் 1.ரௌலட்டட் மட்பாண்டங்கள் ( Rouletted Ware ) 2. அரிட்டைன் மட்கலன்கள் ( Arretine Ware ) 3. ஆம்போரா ஜாடிகள் ( Amphora Jars ) முதலான குறிப்பிடத்தக்கன.

சீன நாட்டு மட்கலன்களும் நம் நாட்டில் மேற்கொள்ளப்பட்ட சில அகழாய்வுகளில் கிடைத்துள்ளன,

மேற்கூறப்பட்ட மட்கலன்கள் பற்றி நாம் ஒன்றன் பின் ஒன்றாகக் காண்போம்.

## (அ) இந்திய மட்பாண்டங்கள்

### 1. கருப்பு வண்ணம் பூசப்பட்ட சிகப்பு மட்கலங்கள் :

சிகப்பு நிற மட்பாண்டங்களின மீது கறுப்பு வண்ணம் பூசப்பட்டுள்ளதால் இது இப்பெயர் பெற்றது. இவை சிந்து சமவெளி நாகரிகத் தொடர்புடைய ஆரப்பா, மொகஞ்சதாரோ, கலிபங்கள், லோத்தல், சன்குதாரோ, ரூப்பர், சுர்போட்ட முதலான அகழாய்வுப் பகுதிகளில் பெருமளவில் கிடைத்துள்ளன. எனவே இதனைச்

சிந்து வெளி நாகரிகத்திற்கே உரிய தனி மட்கலன் என்று கூட நவிலலாம்.

இம்மட்பாண்டங்களின் மீது கட்டங்கள், வட்டங்கள், வளைகோடுகள், நேர் கோடுகள் ஆகியவற்றால் ஆன ஓவியங்கள் காணப்படுகின்றன. மரங்கள், பறவைகள், விலங்குகள் ஆகியவற்றின் ஓவியங்களும் இடம்பெறுகின்றன.

**2. சாம்பல் நிற மட்பாண்டங்கள்** (பழுப்பு நிற மட்கலன்கள்):

புதிய கற்காலம் ஒரு புரட்சிக் காலம். இக்காலத்தில்தான் மனிதன் முதன்முதலாக மட்கலன்களை உருவாக்கினான். இவற்றுள் பெரும்பாலானவை கையால் வனையப்பட்டன. இவை சாம்பல் (பழுப்பு) நிறத்தைப் பெற்றிருந்தன. இவை யாவும் நேர்த்தியாக இல்லாமல் கரடுமுரடாக இருந்தன. இதனைப் போன்ற மட்பாண்டங்கள் தமிழ்நாட்டில் பையம் பள்ளியில் புதிய கற்காலக் கருவிகளுடன் அகழ்ந்தெடுக்கப்பட்டன. அகழ்ந்தெடுக்கப்பட்ட சாம்பல் நிற மட்பாண்டங்கள் கி.மு. 1400 ஆம் ஆண்டைக் சேர்ந்ததாக தொல்லியலார் வரையறுத்துள்ளனர். ஆந்திர மாநிலத்தில் உன்னூரிலும் கர்நாடக மாநிலத்தில் பிரம்மகிரி தக்கலக் கோட்டை, பிலிகல் ஆகிய இடங்களிலும் சாம்பல் நிற மட்பாண்டங்கள் அகழ்ந்தெடுக்கப்படுள்ளன.

கங்கைச் சமவெளிப் பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் வண்ணம் தீட்டப்பட்ட சாம்பல் நிற மட்பாண்டங்கள் பெருமளவில் கிடைத்துள்ளன. இவை யாவும் புதிய கற்கால சாம்பல் நிற மட்பாண்டங்களைக் காட்டிலும் நேர்த்தியானவை கங்கைச் சமவெளியில் வாழ்ந்த ஒரு குறப்பிட்ட பண்பாட்டினரே இவற்றைப் பயன்படுத்தினர் எனலாம்.

வண்ணங்கள் தீட்டப் பெறாத ஆனால் அதே நேரத்தில் நேர்த்தியான வகையில் மெருகூட்டப்பட்ட சாம்பல் நிற மட்பாண்டங்கள் காஞ்சிபுரம், அரிக்கமேடு அகழாய்வுகளில் குறைந்த அளவில் கிடைத்துள்ளன.

### 3. கறுப்பு சிகப்பு நிற மட்பாண்டங்கள், கலங்கள் :

இம்மட்பாண்டங்களின் வெளிப்புறம் சிகப்பாகவும் உட்புறம் கருப்பாகவும் உள்ளதால் இது கறுப்பு சிகப்பு மட்பாண்டம் என அழைக்கப்படுகிறது. சூளையில் மட்பாண்டங்களைக் குப்புறச் கவிழ்த்துச் சுடுவதால் உட்புறம் கருப்பாகவும் வெளிப்புறம் சிகப்பாகவும் உள்ளது. இது ஒரு ரசாயன மாற்றம். சிந்து சமவெளியில் தொடக்க காலத்தில் இம்மட்பாண்டங்கள் இரும்புகால மக்கள் வாழ்ந்த இடங்களிலும் சவக் குழிகளிலும் காணப்பட்டதால் இவை மெகலிதிய மட்பாண்டங்கள் (Megalithic Pottery) என்று அழைக்கப்பட்டன. உறையூர், திருக்காம்புலியூர், காஞ்சிபுரம் அகழாய்வுகளில் கிடைத்த கருப்பு சிகப்பு நிற பானையோடுகள் சிலவற்றில் பிராமி எழுத்துக்களும் கீறல் குறியீடுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. சிலவற்றில் குறுக்கு நெடுக்கு கோடுகளும் போடப்பட்டுள்ளன. வட இந்திய அகழாய்வுகளில் மண்ணடுக்குகளில் இவை இரும்பு காலத்திற்கு முன்பே கிடைத்துள்ளமை கவனிக்கத்தக்கது. குறிப்பாக சோன்பூர், லோத்தல் அகழாய்வுகளில் இவை கிடைத்துள்ளன. எனவே இதன் தோற்றம் இரும்பு காலத்திற்கு முற்பட்டது, என்ற புதிய ஆய்வினைத் தொல்லியல் மாணவர்கள் உணர்தல் அவசியம். கருப்பு சிகப்பு பானை ஓடுகளின் காலம் மெகாலிதிய காலத்தைச் சேர்ந்தது எனும் கருத்து வலிவிழந்து விட்டது.

## 4. வட இந்திய பளபளக்கும் கறுப்பு மட்கலன்கள் :

இதன் காலம் கி.மு. 700. இதனை மௌரியர் காலத்திய மட்கலன்கள் எனவும் கூறுவர். கங்கை நதிப் பள்ளத்தாக்கு அகழாய்வுகளில் வண்ணம் தீட்டப்பட்ட சாம்பல் நிற மட்பாண்டங்கள் கிடைத்துள்ள மண்ணடுக்குகளுக்கு மேலுள்ள மண் அடுக்குகளில் இவை அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. மற்றும் இம்மண்ணடுக்குகள் மௌரியரது ஆட்சிக்காலத்தின் சமகாலத்ததாகக் (Contemporary) கருதப்படுவதால் இவ்வகை மட்கலன்கள் மௌரிய காலத்திய மட்கலன்கள் என்று குறிப்பிடப்படுகின்றன.

இவை கறுப்பு நிறத்துடன் பளபளப்புத் தன்மை உடையதாலும், வட இந்தியாவில் மட்டுமே அதிக அளவில் கிடைப்பதாலும் வட இந்திய பளபளக்கும் கறுப்பு மட்கலன்கள் என அழைக்கப்படுகின்றன. இவை கறுப்பு மட்கலத்தினின்றும் (All Black ware) வேறுபட்டவை. மாறுபட்டவை; நகர வாழ்க்கையுடன் தொடர்புடையவை.

## 5. முழுக்கறுப்பு நிற மட்கலங்கள் : (All Black ware)

இவ்வகை மட்பாண்டங்கள் உட்புறம் மட்டுமின்றி வெளிப்புறமும் கருமையாக இருப்பதால் முழுக்கறுப்பு மட்கலங்கள் என அழைக்கப்படுகின்றன. இவை கறுப்பு சிகப்பு நிற மட்கலங்கள் கிடைக்கும் மண்ணடுக்குகளிலேயே காணப்படுவதால் இவை இரண்டும் உடன் காலத்தவை என்பது புலனாகும். இப்பாண்டங்களில் முழுக்கறுப்பு நிறக் கலவை பூசப்படுவதாலும், சூளையில் நன்கு சுடப்படுவதாலும்முழுக்கறுப்பு நிறம் பெற்று பளபளப்பாக உள்ளன. கொற்கை, காஞ்சிபுரம் முதலான இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் கிடைத்துள்ள கறுப்பு நிற மட்பாண்டத் துண்டுகள் சிலவற்றில் மட்டும் வெண்மை நிறம்

திட்டப்பட்டிருப்பது புதுமை ஆகும். மக்கள் வாழ்ந்த பகுதிகளில் மட்டுமின்றி, சவக்குழிகளிலும் இவ்வகை மட்கலங்கள் பெருமளவில் கிடைத்துள்ளன. இரண்டிற்கும் உருவ அமைப்பில் வேறுபாடு காணப்படுகின்றன என்பது மட்டும் இங்கே நினைவிற் கொள்ளத்தக்கது. இவை அனைத்தும் மிக உயர்ந்த வகையைச் (ரகம்) சார்ந்தவை. பானைகள், மிக மெலிந்த சுவரைக் கொண்டுள்ளன. சில மட்கலன்கள், கிராபிடி, குறியீடுகளுடனும் காணப்படுகின்றன. முழுக்கறுப்பு மட்கலன்களை கறுப்பு நிற மட்கலன்கள் எனவும் கூறலாம்.

## 6. சிகப்பு நிற மட்கலன்கள் : ( Red Ware)

தமிழகத்தில் இவ்வகை மட்கலன்கள் பல வடிவங்களில் அதிக அளவில் கிடைத்து உள்ளன. இவற்றுள் நேர்த்தியான வகைகளும் உண்டு, நேர்த்தியற்ற வகைகளும் உண்டு. புதிய கற்காலத்தில் உருவாக்கப்பட்ட இக்கலன்கள் கையினால் வனையப்பட்டு, முழுமையாகச் சுடப்படாமல் அரை வேக்காட்டுடன் திகழ்ந்தன. உலோக காலத்திற்குப் பின்னர் இவை குயவனது சக்கரத்தின் உதவியால் உருவாக்கப்பட்டன.

இவற்றின் வடிவமைப்பு காலத்திற்கேற்ப, பண்பாட்டிற்கேற்ப, தேவைக்கு ஏற்ப பல வடிவங்களில் வனையப்பட்டுள்ளன. இவற்றுள் பல வகைகள் காணப்படுகின்றன. அவற்றுள் நேர்த்தியற்ற மட்பாண்டங்கள் (Coarse Redware) சிகப்பு நிறசாயம் பூசப்பட்ட மட்கலன்கள் (Red Slipped ware) ஆகியவை குறிப்பிடத்தக்கன. துளையிடப்பட்ட சிகப்பு நிற மட்பாண்டங்கள் (Perforated Redware) இவ்வகை மட்பாண்டங்கள் சிலவற்றில் ஒப்பனை மிகுந்துள்ளன. எடுத்துக்காட்டாக கோடுகளாலான ஒப்பனை, நகம் பதிக்கப்பட்டது போன்ற கீரல்கள் கொண்ட ஒப்பனை, பூ வேலைப்பாடு

ஆகியவற்றைக் குறிப்பிடலாம், சிகப்பு நிற மட்பாண்டங்கள் சமையலுக்கும் மற்றும் பலவிதமான அன்றாட உபயோகத்திற்கும் பயன்படுத்தப்பட்டுவதால் இவற்றில் சாயங்கள் பூசப்படுவதில்லை. இருப்பினும் வண்ணம் பூசப்பட்ட பானை வகைகள் சில தமிழ்நாட்டில் உள்ள பையம்பள்ளி, தக்களக் கோட்டை, சங்கன கல்லு அகழாய்வுகளில் கிடைத்து உள்ளன.

## 7. காவிக்கலவை பூசப்பட்ட மட்பாண்டங்கள் : (Russet Coated Potterty)

தொடக்க காலத்தில் இதனை ஆந்திர மட்பாண்டங்கள் என்றே அழைத்தனர். காரணம், இவ்வகை மட்பாண்டங்கள் ஆந்திரப் பிரதேசத்தை ஆண்ட சாதவாகனர்களின் நாயைங்களுடன் அதிக அளவில் அகழ்வாய்வில் கிடைத்தன. ஆனால் தற்காலத்திலோ இவை சாதவாகனரது ஆட்சிக்குட்படாத பல்வேறு பகுதிகளிலும் கிடைந்துள்ளன. எனவே இவற்றை ஆந்திர பாண்டங்கள் எனக் கூறுவது பொருத்தமற்றது.

காவிக்கலவை பூசப்பட்ட மட்பாண்டங்களை முதன்முதலில் கண்டுபிடித்து உலகிற்கு உணர்த்திய பெருமை திரு. ஜே. பாபிங்க்டன் அவர்களையே சாரும். (1819). இவற்றில் பெரும்பாலும்வெளிப் புறத்தில் மட்டுமே காவிக்கலவை பூசப்பட்டிருந்துன. ஆனால் அண்மைக்கால அகழாய்வுகளில் உட்புறங்களிலும் காவிக்கலவை பூசப்பட்ட மட்பாண்டங்கள் கிடைந்துள்ளன. இவ்வகை மட்பாண்டங்கள் சில வண்ணங்கள் திட்டப்பெற்றும் காணப்படுகின்றன.

இவற்றுள் பல வகைகள் கிடைத்துள்ளன. அவற்றுள் சிகப்பு நிற மட்பாண்டங்களின் மீது காவிக்கலவை மட்டுமே பூசப்பட்டுள்ளன. வேறு சிலவற்றுள் காவிக்கலவையின்மீது வெள்ளை அல்லது மஞ்சள் நிற வண்ணங்களும் பூசப்பட்டுள்ளன,

இவ்வண்ணங்களில் பல கோடுகள், வளைவுகள், புள்ளிகள், வட்டங்கள் ஆகியன போடப்பட்டுள்ளன. கருப்பு சிகப்பு, மட்பாண்டங்களிலும் காவிக்கலவை பூசப்பட்டிருப்பதனை அண்மைக்கால ஆய்வுகளின் மூலம் அறியலாம்.

## 8. கருஞ்சிகப்புக் கலவை பூசப்பட்ட மட்பாண்டங்கள் : (Bright Slipped ware)

சிகப்பு நிற மட்பாண்டங்களின் மீது கருஞ்சிகப்புக் கலவை பூசப்பட்டு, நேர்த்தியாகவும், பளபளப்பாகவும் காட்சியளிப்பதால் இதனை இப்பெயரால் அழைக்கின்றனர். தமிழ்நாட்டில் திருக்காம்புலியூர், உறையூர், காஞ்சிபுரம் ஆகிய இடங்களின் அகழாய்வுகளில் இவ்வகை மட்பாண்டங்கள் அதிக அளவில் கிடைத்துள்ளன. சிறு கிண்ணம், தட்டு போன்றவற்றின் உள்ளும் புறமும் இச்சிவப்புக் கலவை பூசப்பட்டுள்ளன. மற்றும் சில மட்பாண்டங்களில் கருஞ்சிவப்புக் கலவை வெளிப்புறத்தில் மட்டுமே பூசப்பட்டுள்ளன.

காஞ்சிபுரம் அகழாய்வில் சற்று மாறுப்பட்ட சில மட்பாண்டங்களும் கிடைத்துள்ளன. சிகப்பு மட்பாண்டங்களில் கருஞ்சிகப்பு கலவைக்குப் பதிலாக ஆரஞ்சு நிறக்கலவை பூசப்பட்ட மட்பாண்டங்களே அவை. எனவே இவை ஆரஞ்சு நிறக்கலவை பூசப்பட்ட மட்பாண்டங்கள் என அழைக்கப்பெறுகின்றன.

## 9. எழுத்து பொறிக்கப்பட்ட மட்பாண்டங்கள் : (Inscribed Potteries)

இந்தியாவின் பல பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மட்பாண்டத்துண்டுகளும் மட்பாண்டங்களும் கிடைத்துள்ளன. இவை மட்பாண்டங்களின் வெளிப்புறங்களில் முகப்புப் பகுதிகளில் அதாவது கழுத்துப்பகுதிக்குக் கீழ் காணப்படுகின்றன.

இவ்வெழுத்துக்கள் இருவகையாக பொறிக்கப்படுகின்றன. மட்பாண்டங்கள் வனையப்பட்டவுடன், காயாமல் ஈரமாக இருக்கும் போது அதில் எழுத்துக்களைப் பொறிப்பது ஒருவகை. சூளையில் வைத்து சுடப்பட்ட பின்னர் கூர்மையான உலோகக் கருவியால் பானையில் எழுத்துக்களைப் பொறிப்பது மற்றொரு வகையாகும்.

தமிழ்நாட்டில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் கிடைத்த மட்பாண்டத் துண்டுகளில் பிராமி எழுத்து வடிவத்தைத் தமிழ் மொழியில் காணலாம். அலகரை, கரூர், உறையூர், காஞ்சிபுரம், கொற்கை, கொடுமணல் அகழாய்வுகளில் இவ்வகை எழுத்துக்கள் பொறித்த பல மட்பாண்டத்துண்டுகள் கிடைத்துள்ளன. பாண்டிச்சேரியிலுள்ள அரிக்கமேடு, ஆந்திரப்பிரதேசத்திலுள்ள.சாலி குண்டம் அகழாய்வுகளிலும் இவ்வகை மட்கலத்துண்டுகள் கிடைத்துள்ளன. இவை கி.மு இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் . நூற்றாண்டு வரையிலான காலத்தைச் சார்ந்ததாக. ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

பெரியார் மாவட்டம் கொடுமணலில் கிடைத்த சிகப்பு மட்கலத்துண்டில் மூலான் அந்துவன் எனும் பெயரும், காஞ்சிபுரத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட சாம்பல் நிற மட்கலத்தில் 'பூதலாசிதா' எனும் பெயரும் பொறிக்கப்பிட்டுள்ளதனை எண்டு எடுத்துக்காட்டாகச் சுட்டலாம். மட்பாண்டங்கள் பெரும்பாலும் சிறுசிறு துண்டுகளாகக் கிடைப்பதால் இதன் வாசகத்தையும் சில சமயங்களில் அறியமுடிவதில்லை

## 10. கீரல் குறியீடுகள் பொறிக்கப்பட்ட மட்பாண்டங்கள் : (Potteries with Graffiti Marks)

எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மடபாண்டங்களைப் போன்று குறியீடுகள் பொறிக்கப்பட்ட மட்பாண்டங்களும் அகழாய்வுகளில்

கிடைத்துள்ளன. இக்குறியீடுகளின் பொருளை நாம் அறிந்து கொள்ள முடியவில்லை. இக்குரியீடுகள் மட்பாண்டங்கள் சுடப்படுவதற்கு முன்னும் அல்லது சுடப்பட்டதற்குப் பின்னரும் பொறிக்கப்பட்டதைக் காணலாம்.

தமிழகத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட மட்பாண்டங்களுள் பலவிதமான குறியீடுகள் உள்ளன. இவற்றுள் அடுக்கடுக்கான கோடுகள், ஒழுங்கற்ற நேர் கோடுகள், வட்டங்கள் மற்றும் சில குறியீடுகள் முதலானவை குறிப்பிடத்தக்கன. இக்குறியீடுகள் மூலம் விண்மீன், அம்பு, மீல் மின், படகு, ஸ்வஸ்திகம், செடி. மரம், முக்கோணம், வட்டம் முதலானவற்றை ஒத்துள்ளன. இவை எவற்றைக் குறிப்பன என்பது குறித்துப் பல ஊகங்கள் நிலவுகின்றன. இவற்றுள் சில குயவர்களின் சங்கேதக் குறிகளாவும், சில வழிபாட்டுத் தொடர்புடையனவாகவும், சில வேட்டைத் தொழிலை உணர்த்துவதாகவும் கருதப்பெறுகின்றன. இவை ஆதி மனிதனின் கூட்டபெயர்களைக் குறிப்பாதாகக் கொள்வதில் தவறில்லை. எனவே கிராபிடி குறிகள் பழங்குடிமக்களின் சமூக அமைப்பையும் அவர்களின் பண்பாட்டுச் சிறப்பையும் சீரிய முறையில் விளக்குகின்றன என்றால் அது மிகையாகாது,

## (ஆ) அயல்நாட்டு மட்பாண்டங்கள்

### 1. உரோம் நாட்டு மட்பாண்டங்கள் :

தென்னிந்தியாவிற்கும் உரோமாபுரிக்கும் இடையே கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்னரும் பின்னரும் சுறுசுறுப்பான வாணிககம் நடந்துவந்தனை நமது இலக்கியங்களும் அயல் நாட்டினரது குறிப்புகளும் தெரிவிக்கின்றன. இவை அண்மைக் கால அகழாய்வுகளாலும், உறுதி செய்யப்பட்டுள்ளன. 'அகழாய்வுகளில் அரிட்டைன், ஆம்போரா, ரௌலட்டட் போன்ற

உரோமானிய மட்பாண்ட வகையகளும், உரோமானியக் காசுகளும் பெருமளவில் கிடைத்துள்ளன உரோம் நாட்டிலிருந்து உயர்ந்த ரக மது, உரோம நாட்டு மட்கலன்களில் கொண்டுவரப்பட்டன. தமிழக அகழாயவுகளில் மட்கலன்கள் அதிக அளவில் காணப்படுகினறன

## a) அரிட்டைன் வகை மட்கலன்கள் (Arre tine Ware) :

இத்தாலி நாடடிலுள்ள 'அரிட்டியம்' என்னும் இடத்தில் இவை முதனமுதலில தயாரிககப்பட்டதால் இது அரிட்டைன் வகை என அழைககப்பெறுகினறது. இவ்வகை மட்கலன்கள் மெருகுடனும் நேர்த்தியுடனும் விளங்குகினறன சில மஞ்சள் கலந்த சிகப்பு நிற மட்கலனகளும் தமிழக அகழாயவுகளில் கிடைந்துள்ளன இவையாவும பனனெடுங்காலம் மண்ணுக்கடியில் கிடந்த போதிலும் இன்றும் மெருகும் பளபளப்பும் குறையாமல் காணப்படுவது விந்தையாகவே உளளது.

பாண்டிச்சேரிககு அருகில் அரியாங்குப்பம் ஆற்றின் கரையில் உள்ள அரிகக மேடு ஆகழாய்வில் மட்டும் இவ்வகை மட்பாண்டங்கள் கிடைததுள்ளன. இவற்றின காலம் கி.பி. 25. கி.பி. 50 என்பது சர் மார்டடிமர் வீலரின (Mortimer Wheeler) கருத்தாகும்.



## b) ரௌலட்டட் மட்பாண்டங்கள் :

இவ்வகை மட்பாணடங்களின் ஓடுகள் தமிழ்நாட்டில் மட்டுமின்றித தெனனிநதியாவிலும் கிடைததுள்ளன மட்கலன்களின் உட்புறம புள்ளிகளாலான ஒப்பனைகள முட்டை வடிவம் போனறும், வடடவடிவிலும அறுகோணம், முக்கோணம் ஆகிய வடிவங்களிலும் காணபபடுகினறன. இவ்வகை ஒப்பனைகள் ரௌலடடட் எனவும, இவறறைத் தாஙகியுள்ள மட்பாணடஙகளை ரௌலட்டட மட்பாணடஙகள எனவும தொல்லியலார் அழைக்கிறனர்.



தமிழ்நாட்டில் கரூர், உறையூர், கொற்கை, திருவாமாத்தூர் அழகன் குலம் காஞ்சிபுரம் செங்கமேடு, வசுவ சமுத்திரம், நத்தமேடு, ஆகிய இடங்களிலும் பாண்டிச்சேரியில் அரிக்கமேடு, கர்நாடகத்தில் சந்திரவல்லி, பிரும்மகிரி, ஆந்திர மாநிலத்தில் சாலிக்குண்டம் முதலான இடங்கலும் இவை அகழ்தெடுக்கப்பட்டுள்ளன. அரிக்கமேடு, சுந்திரவல்லி ஆகிய இடங்களில் இம்மட்கலன்களுடன் கி.பி. முதலாம் நூற்றாண்டில் ஆண்ட உரோம் நாட்டு மன்னர்களின் காசுகளும் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

உரோம நாட்டு "ரௌலடட் மட்கலண்களைப்" போன்று நம்நாட்டுக் குயவர்களும் பானைகள் வனைந்தனர். இவை ஏறத்தாழ உரோம் நாட்டு வகையை ஒத்திருந்த போதிலும், வேறுபாடுகள் தெரியாமல் இல்லை. தமிழ் நாட்டில் தயாரிக்கப்பட்டவை சற்று திண்மையாகவும், வழவழப்பு குறைந்தும் காணப்படுவதுடன் களி மண்ணின் தன்மையும் வேறுபட்டுள்ளது, உரோமானிய மாதிரியில் தயாரிக்கப்பட்ட மட்பாண்டத் துண்டுகள் அரிக்க மேடு, சாலைக்காடு, உறையூர்-அகழாய்வுகளிலும் கிடைத்துள்ளன. இருப்பினும் இவை உரோமானிய ரௌலட் வகைக்குக் காலத்தால் சற்று, பிற்பட்டது என்பது மட்டும் இங்கே நினைவிற் கொள்ளத்தக்கது.

## c) ஆம்போரா ஜாடிகள் :

இதுவும் உரோமானிய வகையைச் சார்ந்த ஒரு மட்கலமே, இவை மிருதுவான களிமண்ணால் செய்யப்பட்ட பழுப்பு நிறம் கொண்ட ஜாடியாகும் இதன் அடிபருத்துக்கூர்மையாகவும் நுனிப்பகுதி அகலமாவும் வாய்ப்பகுதியின் இருமருங்கிலும் கைப்பிடி உள்ளதாகவும் காணப்படுகின்றன. உருவமைப்பில் இது முள்ளங்கிக் கிழங்கைப் போன்றதென்று கூறலாம். இவற்றை

மண்ணில் புதைத்து அவற்றில் மது, எண்ணெய் முதலானவற்றை ஊற்றி வைத்துத் தேவையான போது இவற்றை வேறொரு சிறிய பாத்திரத்தால் மொண்டு கொள்ள முடியும். இவற்றை உரோம் நாட்டு வாணிகர்கள் தமிழகத்திற்குக் கொண்டு வந்தனர். கரூர் வசுவமுத்திரம், அரிக்கமேடு, அகழாய்வுகளில் இவை கிடைந்துள்ளன.

இத்தகைய ஆம்போரா ஜாடிகளைப்பார்த்து தமிழகக் குயவர்களும் கூர்மையான ஜாடிகளை உருவாக்கியுள்ளனர். தமிழகத்தில் தயாரிக்கப்பட்ட ஆம்போரா போலி ஜாடிகள் காஞ்சிபுரத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் கைப்பிடிகள் காணப்படவில்லை. இவை சிறிதும் உடைவுபடால் முழுமையான வடிவில் வரிசையாகப் புதைத்து வைக்கப்ட்டதனைக் காஞ்சிபுரம் அகழாய்வு தெரிவிக்கின்றது

மேற்கூறப்பட்ட உரோமானிய மட்பாண்ட வகைகள் அரிட்டைன் வகை மட்பாண்ட வகைகள், காலத்தால் பிந்தியவை என்பதனை அகழாய்வுகள் (அரிக்கமேடு) உணர்த்துகின்றன. ஆம்போரா, ரௌலட்டட் மட்பாண்டங்கள் அரிட்டைன் வகைக்குக் காலத்தில் முற்பட்டது என்பதனை இவை கிடைத்துள்ள மண்ணடுக்குகளைக் கொண்டறியலாம்.

## (இ)சீன நாட்டு மட்பாண்டங்கள்:

உரோம நாட்டு மட்கலன்களேயன்றி, சீன நாட்டு மட்கலன்களும் தமிழ்நாட்டில் கிடைத்துள்ளன. பண்டைக்கால முதற்கொண்டே நம்நாடு சீனாவுடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தது என்பதனை இலக்கியச் சான்றுகளாலும் சீனப் பயணியர் குறிப்புகளாலும் அறியலாம். சோழப்பெருமன்னர்களான முதலாம் இராசராசன் (கி.பி.985 - 1014) முதலாம் இராசேந்திரன்

(கி.பி. 1012 - 1044) ஆகியோர் சீனாவிற்குத் தூதுக்குழுக்கள் அனுப்பியதனை அறிகிறோம். கரூர் அமராவதி ஆற்றுப்படுகையிலும் அண்மையில் இருபத்துக்கும் மேற்பட்ட சீனக்காசுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. தமிழ் நாட்டில் 1800 சீனக்காசுகள் கிடைத்துள்ளன. சீனக்காசுகளும் தஞ்சை மாவட்டத்தில் கிடைத்துள்ளன. இதனால் தஞ்சை மாவட்டத்தில் கிடைத்துள்ள சீனக்காசுக்குவியல் பற்றி நான் எழுதியுள்ள 'முதலாம் இராசேந்திர சோழன்' எனும் நூலில் கண்டுகொள்க* இதனால் சீனாவிற்கும் தமிழ்நாட்டிற்கும் இடையே நிலவிய அரசியல் வணிகத் தொடர்பு புலனாகின்றது. சீனப் பானை ஓடுகளும் இதனை உறுதிசெய்கின்றன

சீனவகை மட்பாண்டங்களுள் ஒன்று செலடன். இவ்வகை மட்பாண்ட ஓடுகள் தமிழகத்தில் உறையூர், காஞ்சிபுரம், கரூர் அகழாய்வுகளில் கிடைத்துள்ளன. கேரள மாநிலத்தில் சேரமான் பரப்பு என்னுமிடத்திலும் இவ்வகை பானை ஓடுகள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

இவை கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரையிலான காலக்கட்டத்தில் தென்னிந்தியாவிற்கு இறங்குமதி செய்யப்பட்டதாகத் தொல்லியலார் கருதுவர். இவை சீனநாட்டு பீங்கான் வகையைப் போன்றுள்ளன. இளம் பச்சை நிறத்ததுடன் காணப்படும் இவை நேர்த்தியாகவும் பளபளப்பாகவும் திகழ்கின்றன.

## உருவம் பொறித்த பானை ஓடுகள் :

தமிழகத்திலுள்ள அழகன்குளம் அகழாய்விலும்,

---

* ம. இராச சேகரதங்கமணி
முதலாம் இராசேந்திர சோழன். பக் 220

பாண்டிச்சேரிஅருகிலுள்ள அரிக்கமேடு அகழாய்விலும் இதனைப் போன்று உருவம் பொறித்த பானை ஓடுகள் கிடைத்துள்ளன. மார்ட்டிமர் வீலர் அவர்கள் அரிக்கமேட்டில் நிகழ்த்திய அகழாய்வின் போது சுடுமண் கிண்ணங்கள் சில கிடைத்தன. இவற்றின் உட்புறத்தில் மயில், புறா, மீன் முதலான உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அரிட்டைன் வகைப்பானையோடுகள் கிடைத்துள்ள பாளநிலையிலேயே இவை கிடைத்துள்ளமை பாராட்டத்தக்கது. இவை வனையப்பட்ட விதத்தை ஆய்வு செய்தால் இவை, அயல் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதாகத்தோன்றுகிறது. ஆனால் அதில் பொறிக்கப்பட்டுள்ள உருவங்களைப்பார்க்கும்போது, அவை தமிழ் நாட்டிலேயே மேலை நாட்டினரின் தாக்கத்தால் வனையப் பெற்றிருத்தல் வேண்டுமெனக் கூறலாம். இந்த உருவங்கள் ஒரு முத்திரையிலிருந்துதான் பதிக்கப்பட்டது போன்று காட்சி தருகின்றன. இக்கிண்ணங்களின் அடிப்பகுதி தட்டையாகவும் மேலே செல்லச் செல்ல சற்று விரிந்த நிலையிலும் காணப்படுகின்றன. அரிக்கமேட்டுக் கிண்ணங்கள் சாம்பல் நிறமாகவும், சாம்பல் கலந்த பழுப்பு நிறமாகவும், கருப்புசிகப்பு நிறமும் மேல்புறத்தில் பழுப்பு நிறம் பூசப்பட்டுள்ளதாகவும் காணப்படுகின்றன. இப்பறவைகளின் உருவங்கள் மத்தியில் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றின் மேலும் கீழும் கோடுகள் வரையப்பட்டுள்ளன.

அரிக்கமேட்டில் கிடைத்ததைப் போன்ற உருவம் பொறித்த பானை ஓடுகள் அழகன்குளம் அகழாய்விலும் கிடைத்துள்ளன. 1987 மற்றும் 1990ஆம் ஆண்டுகளில் தமிழ்நாடு தொல்லியல் துறை அகழாய்வு மேற்கொண்ட போது இப்பானை ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. அழகன்குளத்துப் பானை ஓடுகளும் கிண்ணவடிவிலான மட்கலமாகக் காணப்படுகின்றன. இவற்றின்

உட்புறத்தில் மயில், புறா, மீன், மற்றும் குதிரை வீரன் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. ஒரு பாணயோட்டில் மயிலின் உருவம் இருவரிசையாக உள்ளன. இவை கருப்பு நிறத்திலும் பழுப்பு நிறத்திலிம் காணப்படுகின்றன. முத்திரை பதிக்கப்பட்ட பானை ஓடுகளில் குறிப்பிடத்தக்கவை நான்காகும் இலை, மயில், புறா, கிளி வடிவங்கள் இம்முத்திரைகளில் உள்ளன. இப்பானையோடுகளுடன் உரோம்நாட்டு ரௌலட்டட் வகைப் பானையோடுகளும் கிடைத்துள்ளதால், இவையாவும் கி.பி. 1,2 நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கூறலாம்.

## இலை வடிவம் கொண்ட பானை ஓடுகள் :

அரிக்கமேடு அகழாய்வில் (கிண்ணம் போன்ற) ஒரு பாத்திரத்தின் உட்பகுதியில் இலை வடிவம் காணப்படுகிறது இவ்வடிவங்கள் கோடுகளால் ஆன வட்டத்திலிருந்து செல்வது போல் தீட்டப்பட்டுள்ளன. சில ஓடுகளில் பூவிதழ் விரிந்தது போல் சித்திரிக்கப்பட்டுள்ளன. இவை, கட்டடப்பகுதிக்கு முன்னுள்ள பாளநிலையில் கிடைத்துள்ளதால் கி.பி. முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கூறலாம். வேறு சில ஓடுகள் கி.பி. 2ஆம் நூற்றாண்டைச்சேர்ந்ததாகவும் உள்ளன. இது போன்ற மட்கலங்களின் அடிப்பகுதியில் அவற்றை நிறுத்தி வைப்பதற்குப் பயன்படும் வட்டங்கள் (FootRing) காணப்படுகின்றன. இவை சாம்பல் நிறுத்திலும், கறுப்பு நிறத்திலும் உள்ளன. இதன் நேர்த்தியைப் பார்க்கும் போது இவை மேல் நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டதாகத் தெரிகிறது. ஒருவேளை இவை மேலை நாட்டுத்தாக்கத்தின் விளைவாக உள் நாட்டில் செய்யப்பட்டதாகவும் இருக்கலாம். இதனைப் போனற பானை ஓடுகள் கிழக்கு மத்திய தரைக்கடல் நாடுகளிலும் கிடைத்துள்ளமை இங்கு நினைவு கூறத்தக்கது.

அழகன்குளம் அகழாய்விலும் இதனைப்போன்ற இலை வடிவம் பொறிக்கப்பட்ட பானையோடுகள் கிடைத்துள்ளன. இவற்றிலும் மட்பாண்டத்தின் அடிப்குதியல் இலை வடிவங்கள் முத்திரையிடப் பெற்றும், வரையப்பட்டும் உள்ளன. இவை ஏறத்தாழ கி.பி முதல் இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். திரு. நடனகாசிநாதன் அவர்கள் இவற்றைக்கள ஆய்வின் போது மேல்பரப்பில் சேகரித்துள்ளார்[□]

## குமிழுடன் கூடிய பானை ஓடுகள் :

அரிக்கமேடு அகழாய்விலும் அழகன்குளம் மேலோட்டாய்விலும் குமிழ் காணபடும் பானையோடுகள் கிடைத்துள்ளன. மட்பாண்டத்தின் அடிப்பகுதியில் உட்புறத்தின் நடுவில் குமிழ் (Knob) காணப்படுகிறது. குமிழைச்சுற்றி வட்ட வடிவில் கோடுகள் போடப்பட்டுள்ளன. சாம்பல் நிறம் கொண்ட இவற்றுள் லோசாகக் கருப்பு நிறமும் பூசப்பட்டுள்ளது. இதன் மாதிரிகள் பாண்டிச்சேரி அருங்காட்சியகத்தில் பார்வைக்கு வைக்கப் பட்டுள்ளன. உரோமானியரின் தாக்கத்தால் இவை உள் நாட்டிலேயே வனையப்பட்டிருக்கலாம் என்று அறிஞர் டாக்டர். விமலா பெக்லி ( Vimala Begley) கருத்துத் தெரிவித்துள்ளார்.

மேற்கூறப்பட்ட பானையோடுகள் அழகன்குளத்திலும் மேற்பரப்பாய்வில் திரு. நடனகாசிநாதன் அவர்களால் கண்டெடுக்கப்பட்டுள்ளன[▼]. இவையும் கி.பி. 1,2, ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படுகின்றன

---

□ 'அழகன்குளத்து அரியபானையேடுகள்' கல்வெட்டு காலாண்டிதழ். 33 (1992 பிப்ரவரி) பக் 27,28.

▼ மேலதே பக் 28, 29.

அழகன்குளம் அகழ்வாய்வின் மூலம் கி.மு. 3ஆம் நூற்றாண்டில் தமிழகத்திற்கும் வட கங்கைப் பகுதிக்கும் நிலவியபண்பாட்டுத் தொடர்பும் கி.பி. 1,2 ஆம் நூற்றாணடுகளில் தமிழகம், இத்தாலி நாட்டுடன் கொண்டிருந்த வணிக உறவும் புலனாகும்.

இது காறும் நம்நாட்டு மட்பாண்டங்களின் வகைகளையும் அயல்நாட்டு மட்பாண்டங்களின் வகைகளையும் பற்றி அறிந்தோம். இனி இம்மட்பாண்ட வகைகள் எந்தந்த வடிவங்களில் காணப்படுகின்றன என்பதனையும் சுருக்கமாகக் காண்போம்.

## மட்பாண்டங்களின் வடிவங்கள் :

தமிழ் நாட்டின் அகழாய்வுகளில் பலவிதமான மட்கலன்களின் சிதைந்த பகுதிகளும், முழு மட்கலன்களும் கிடைத்துள்ளன. இவை பலவகைப்பட்டன ஆகும். இவற்றுள் குடிநீர்ப் பானைகள், குவிந்ததட்டுகள், மூடிகள், பலவிதமான விளிம்புகளைக் கொண்ட கிண்ணங்கள், அகலமான தட்டுகள், தடித்த விளிம்பும் சித்திர வேலைப்பாடும் கொண்ட மற்ற பாத்திரங்களும் அடங்கும். இவை அன்றாடம் நமது முன்னோர்களால் பயன்படுத்தப்பட்டவை. இறந்தவர்களைப் புதைக்கப்பயன்படும் முதுமக்கள் தாழிகள் இவற்றுள் ஒரு தனி வகையாகும். இவை தடித்த சுவர்களைக் கொண்டவை. உருவில் மிகப் பெரியவை.

## முடிவுரை :

இம்மட்பாண்டங்களுள் பெரும்பாலானவை உணவுப் பொருட்களைச் சமைப்பதற்கும் சாப்பிடுவதற்கும், சேமித்து வைப்பதற்கும் பண்டைய மனிதனால் பயன்படுத்தப்பட்டன. எனவே இவை அகழாய்வின் உயிர்நாடியாகும். இவற்றைக் கொண்டுதான் பல்வேறு மனித நாகரிகம் கணிக்கப்படுகின்றன. எனவே

இவற்றைப் பல்வேறு மனித இனங்களின் பண்பாடுகளை வெளிப்படுத்தும் சின்னங்களாகவும் கருதலாம். எனவே தான் தொல்லியலார் இவற்றை ஆராய்ந்து, வகைப்படுத்தி, பல வரலாற்று உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளனர்.

# 6. நாணயவியல் (Numismatics)

## முன்னுரை :

நாணயங்களைப் பற்றி ஆய்வு செய்வதனை நாணயவியல் என்பர். நாணயம் என்பதனைக் காசு, பணம் எனவும் அழைப்பர். காசு என்பாதற்குத் தமிழில் 43 பெயர்கள் வழங்கப்படுகின்றன. ஒரு நாட்டில் பொருளாதார வளர்ச்சிக்கும் வாணிகபத்திற்கும் நாணயங்கள் பெருந்துணை புரிகின்றன.

## நாணயம் ஒரு விளக்கம் :

ஒரு பொருளை வாங்கவும் விற்கவும், ஒரு பொருளின் மதிப்பை நிர்ணயிக்கவும் அனைவராலும் ஒருமனதாக ஏற்றக்கொள்ளப்பட்ட ஒரு கருவியே நாணயம் ஆகும். நாணயங்கள் புழக்கத்திற்கு வருமுன்னர் பண்டமாற்று முறையே வழக்கில் இருந்தது. நாணயம் புழக்கத்திற்கு வந்த பின்னரே வாணிகம் பன்மடங்கு பெருகியது. ஒரு நாட்டின் அரசியல், சமூக, பொருளாதார வரலாற்றைக் கணிப்பதற்குப் பயன்படும் அடிப்படைச் சான்றுகளுள் நாணயச் சான்றுகள் முக்கியமானதோர் இடத்தைப் பெறுகின்றன.

நாணயங்களின் துணைகொண்டு அவற்றை வெளியிட்ட வேந்தர்களது பெயர்கள், விருதுப் பெயர்கள், மரபு, அவர்கள் பின்பற்றிய சமயம், வணங்கிய தெய்வங்கள், அத்தெய்வங்களின் வடிவமைப்புகள் நம்பிக்கைகள், எழுத்து, ஆட்சி மொழி வளர்ச்சி, கலைச் சிறப்பு, ஆட்சிச் செழுமை, வாணிகம், வேந்தரின் ஆட்சிப் பரப்பு முதலான பல செய்திகளை அறிந்து கொள்ளமுடிகின்றது.

இந்தியாவில் ஏறத்தாழ கி.மு. ஏழாம் நூற்றாண்டிலேயே நாணயங்கள் முழு வடிவம் பெற்றுவிட்டன எனக் கருதலாம். சீனா, லிடியா ஆகிய நாடுகளில் நாணயங்கள் தோன்றுவதற்கு நூற்றாண்டுகளுக்கு முன்பே, அவை இந்தியாவில் தோன்றிவிட்டன

என்பது பெருமைக்குரிய செய்தியாகும். வெள்ளி முத்திரை நாணயங்களைத்தான் இந்தியாவின் தொடக்க கால நாணயங்களாக நாணயவியல் அறிஞர்கள் கருதுவர். இவை ஏறந்தாழ கி.மு.ஏழாம் நூற்றாண்டில் தொடங்கி கி.மு. இரண்டாம் நூற்றாண்டு வரையில் புழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். வெள்ளி முத்திரை நாணயங்கள் வட்டம், நீள் வட்டம், முட்டை ஆகிய பல வடிவங்களில் வெளியிடப்பட்டன. இவற்றுள் முன்பக்கத்தில் மட்டுமே முத்திரைச் சின்னங்கள் இருக்கும், எழுத்துக்கள் ஏதும் பொறிக்கப்பட வில்லை. மரங்கள், குன்றுகள், பறவைகள், விலங்குகள், மனிதன், மத அடையாளங்கள், சதுரம், முக்கோணம் முதலன சின்னங்களே முத்திரைகளாக இடம் பெற்றன.

## ஆ. குப்தர் கால நாணயங்கள் :

இந்திய வரலாற்றில் குப்தர்களின் ஆட்சிக்காலம் ஓர் பொற்காலம். இம்மரபின் புகழ்பூத்த மன்னர்களுள் சந்திரகுப்தர் (கி.மு. 319 - 350). சமுத்திர குப்தர் (கி.பி. 350 - 370), இரண்டாம் சந்திரகுப்தர் (கி.பி. 376- 414) முதலாம் குமாரகுப்தர் (415- 450) ஆகியோரின் சாதனைகளும், கீர்த்திகளும் இந்தியவரலாற்று மாணவர்களின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்துள்ளன. மாபெரும் வெற்றிவீரர்களாகத் திகழ்ந்த இவர்கள், மிகச் சிறந்த நாணயங்களையும் வெளியிட்டுப் புகழ் பெற்றுள்ளனர். இப்பேரரசர்கள், மிகுந்த அளவில் தங்க நாணயங்களை வெளியிட்டனர். இவற்றைக் கண்டுவியந்த புலவர் ஒருவர் இதனைப் 'பொன்மாரி' என்றே புகழ்ந்துள்ளார். இவர்களது தொடக்கால நாணயங்கள் பெரும்பாலும் குஷானரது நாணயங்களைப் பெரிதும் பின்பற்றியதே ஆகும். எனினும் குப்தரது நாணயங்கள் அவற்றைக் காட்டிலும் தரமானவை. குப்தர் காலத்திய நாணயங்களை நாம்

1. முந்தைய குப்தர்காலத்தியது 2. பிந்திய குப்தர் காலத்தியது என இருவகையாகப் பகுக்கலாம்.

முந்தைய குப்தர் காலத்தில் தங்க நாணயங்கள் மட்டுமே வெளியிடப்பட்டுள்ளன.

தொடக்க காலத்திய இவர்களது நாணயங்களில் அரசன் நிற்கும் தோற்றமும் கம்பீரமும் குஷான நாணயங்களைப் போன்றே உள்ளன இவர்கள் நீண்ட மேலங்கியையும் கால் சட்டையும் அணிந்துள்ளமை குஷான நாணயங்களை. ஒத்துள்ளன. குஷான மன்னரது காசுகளில், மன்னன் தனது இடக்கரத்தில் ஈட்டியோ, போர்க் கோடரியோ, விருதுக் கொடியோ, வில்லோ அல்லது வாளோ ஏந்தியுள்ளான். வலப்புறத்தில் சூலத்திற்குப் பதிலாகக் கருடக்கொடி (கருடத்துவஜம்) காண்பிக்கப்பட்டுள்ளது. குப்த வேந்தர்கள் குஷானர்களைப் போன்றே தம் காசுகளில் சின மரபுப்படித் தம் பெயரைப் பிராமியில் மேலிருந்து கீழாகத்தான் பொறித்துள்ளனர்.

இவர்களது நாணயங்களின் பின்புறம், செல்வத்தின் அதிபதியாகக் கருதப்படும் பெண் தெய்வமான அர்டோக்ஷோ, தன் இடக்கரத்தில் செல்வத்தின் (கொம்பு) சின்னத்தையும் கயிற்றையும் பிடித்துக் கொண்டு உயர்ந்த சிம்மாசனத்தில் அமர்ந்த நிலையில் காட்டப்பட்டுள்ளார். ஆனால் நாளடைவில் அர்டோக்ஷோவிற்குப் பதிலாக லட்சுமியின் உருவத்தைப் பொறித்துள்ளனர்.

பொதுவாகக் குப்த மன்னர்களது நாணயங்கள் அனைத்திலும் மன்னர் தம் இடக்கரத்தில் வில்லையும், வலககரத்தில் அம்பையும் ஏந்திய வண்ணம் சித்தரிக்கப்பட்டுள்ளார். இரண்டாம் சந்திரகுப்தரும், முதலாம் குமாரகுப்தரும் இத்தகைய நாணயங்களை வெளியிட்டுள்ளனர். ஆனால் சந்திரகுப்தரின் நாணயங்களிலோ அவர் ஈட்டி அல்லது கொடியைத் தனது கரத்தில் தாங்கியுள்ளார்.

இரண்டாம் சந்திரகுப்தரும் இவ்வகையான நாணயங்களை வெளியிட்டுள்ளார். முதலாம் குமாரகுப்தர் காலத்திய நாணயங்கள் சிலவற்றில் இவர் தனது கரத்தில் கொடிக்குப் பதிலாக வாளை ஏந்தியுள்ளார். சமுத்திரகுப்தர் வெளியிட்டுள்ள நாணயங்கள் சிலவற்றில், அவர் போர்க்கோடரியை இடது கரத்தில் தாங்கியும், வலது கரத்தைத் தம் இடுப்பில் வைத்து இருக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளார். அவரது வலப்புறம் குள்ளன் ஒருவன் நின்ற நிலையில் உள்ளான். இவை அனைத்தும் குப்தர்களின் கலையார்வத்தைப் பறைசாற்றுவதாக அமைந்துள்ளன.

குப்தரது நாணயங்களுள் அரசி அரசன் பெயரும் உருவமும் பொறிந்த நாணயங்கள் கலைச்சிறப்பு மிக்கவை. இதனைப் போன்ற நாணயங்களை முதலாம் சந்திரகுப்தர், முதலாம் குமார குப்தர், ஸ்காந்த குப்தர் முதலானோர் வெளியிட்டுள்ளனர். சந்திரகுப்தரின் உருவமும் அவரது அரசியின் உருவமும் பெயர்களும் பொறிக்கப்பட்டுள்ள தங்க நாணயங்கள் கிடைத்துள்ளன. இவற்றை சந்திரகுப்தரே வெளியிட்டிருப்பார் என்று ஆய்வாளர் சிலர் கருதுவர். இவை தனது தாய் தந்தையர் நினைவாக சமுத்திரகுப்தரால் வெளியிடப்பெற்றிருத்தல் வேண்டும் என்று வேறு சிலர் கருதுகின்றனர். ஏனெனில் இக்காசுகளில் முதலாம் சந்திரகுப்தரின் பெயர் மட்டுமின்றி, அவரது தேவியான குமாரதேவியின் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது. அடுத்து முதலாம் குமார குப்தரும் ஸ்காந்த குப்தரும் வெளியிட்டுள்ள நாணயங்களில் அவரவர்களின் பெயர்கள் மட்டும் பொறிக்கப்பட்டுள்ளனவே அன்றி, தேவியரது பெயர்கள் காணப்பெறவில்லை என்பதும் இங்கே சிந்திக்கத்தக்கது.

குப்தப் பேரரசர்கள் தமது கலையார்வத்தை உணர்த்தும் காசுகளையும் வெளியிட்டுள்ளனர். எடுத்துக்காட்டாக சமுத்திரகுப்தரும் முதலாம் குமாரகுப்தரும் வெளியிட்டுள்ள

புதியவகை நாணயம் ஒன்றைச் சுட்டலாம். இதில் மன்னர் இந்தியப் பாணியில் உடையணிந்து மஞ்சத்தில் அமர்ந்துகொண்டு வீணை வாசிக்கும் நிலையில் சித்தரிக்கப்பட்டுள்ளார். இதனால் இவர்கள் இசையில் பயிற்சியும் தேர்ச்சியும் பெற்று விளங்கிய கலைஞர்கள் என்பது புலனாகும். இவை மன்னரது இசைப் புலமையை வெளிப்படுத்துவதுடன், இக்காசுகளை நேர்த்தியான முறையில் உருவாக்கிய பொற்கொல்லரின் தனித்திறமையும் புலனாகின்றன.

குப்தப்பேரரசர்கள் வேட்டையாடும் வகையிலும் குதிரைசவாரி செய்வதிலும் தேர்ச்சி மிக்கவர்கள் என்பதனை வெளிக்காட்டும் வகையிலும் சில நாணயங்கள் காணப்படுகின்றன. இவற்றுள், தான்புலியைக் கொல்வது போன்று சந்திரகுப்தர் வெளியிட்ட நாணயங்களும், இரண்டாம் சந்திரகுப்தர் சீரும் சிங்கத்தைக் கொல்வதுபோன்று சித்தரிக்கப்பட்ட நாணயங்களும் குறிப்பிடத்தக்கவை ஆகும். முதலாம் குமார குப்தரது நாணயங்களில் இவ்விரு சின்னங்களும் ஒருசேரக்காட்டப்பட்டுள்ளமை, இவ்வேந்தனது அஞ்சா நெஞ்சத்தைப் படம்பிடித்துக்காட்டுவதாக உள்ளது. இதனைப்போன்று, சிங்கத்தைத் தனது உடை வாளால் தாக்கும் நிலையில் இரண்டாம் சந்திரகுப்தர் ஒரு நாணயத்தில் சித்தரிக்கப்பட்டு உள்ளார். இந்நாணயம் இன்றும் லக்னோ அருங்காட்சியகத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது.

## குதிரை சவாரி :

குப்தப்பேரரசர் குதிரை மீது சவாரி செய்வது போன்ற காட்சியைச் சித்தரிக்கும் நாணயங்களும், அரசர் குதிரை மீது சவாரி செய்து கொண்டே கொடிய விலங்குகளை வேட்டை யாடும் காட்சிகளைச் சித்தரிக்கும் நாணயங்களும் வெளியிடப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக முதலாம் குமாரகுப்தர் குதிரை மீதமர்ந்துகொண்டே காண்டா மிருகத்துடன போரிடும் காட்சியும்,

யானைமீதமர்ந்துகொண்டே சிங்கத்தைத் தாக்கும் காட்சியும் பொறிக்கப்பட்ட காசுகளைச் சுட்டலாம். இவற்றில் உள்ள உருவங்கள் மிகத்தெளிவாகவும் கவர்ச்சியாகவும் உள்ளமை உள்ளத்தைக்கொள்ளை கொள்ளும் பான்மையினவாகும்

## அஸ்வமேதயாக நாணயங்கள் :

குப்தப் பெருமன்னர்கள் இந்து சமய மறுமலர்ச்சிக்குப் பாடுபட்டவர்கள். அசுவமேதயாகம் புரிவதில் பேரார்வம் காட்டியவர்கள். எனவேதான் சமுத்திரகுப்தரும், முதலாம் குமாரகுப்தரும், அசுவமேத யாகத்தை நடத்திக்கொடுத்த குருக்களுக்குத் தட்சினை வழங்குவதுபோன்ற காட்சிகளைச் சித்தரிக்கும் தங்க நாணயங்களை வெளியிட்டுள்ளனர்

இறையன்பில் மேம்பட்டு விளங்கிய குப்தப் பெருமன்னர்கள் தாம் வெளியிட்ட காசுகளில் ஒரு பக்கம் கங்காதேவி, அருள்மிகு லட்சுமி, அருள்மிகு துர்க்கை, அருள்மிகு திருமுருகன் (கார்த்திகேயன) முதலான தெய்வத் திரு உருவங்களையும் தனித்தனியே பொறித்துள்ளனர். சிலவற்றில் தெய்வ உருவமோ என்று ஐயுறத்தகக உருவில் தமது அரசியையும் காட்டியுள்ளனர். முதலாம் குமார குப்தரது நாணயம் ஒன்றில் கம்பீரமாக மலையின்மீது அமர்ந்துள்ள திருமுருகன் திருவுருவத்தினைக் காண முடிகின்றது. இவையனைத்தும் நுண்ணியகலை நுணுக்கம் வாய்தவை.

## வாசகம் பொறிக்கப்பட்ட நாணயங்கள் :

குப்தர்காலத்திய நாணயங்கள் சிலவற்றில் வாசகங்கள் கவிதை நடையில் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வாசகங்கள் சில குப்தப் பேரரசின் பெருமையையும் சிறப்பையும் பறைசாற்றுவதாக உள்ளன முதலாம் குமாரகுப்தரின்

நாணயங்களில் இருபத்தது நான்கு வாசகங்களுக்கு மேல் பொறிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. அடுத்தநிலையில் இரண்டாம் சந்திரகுப்தரின் நாணயங்களில் பத்து வாசகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வாசகங்கள் யாவும் கலையழகுடன் தீட்டப்பட்டுள்ளன.

## வெள்ளிக்காசுகள் :

பேரளவில் தங்க நாணயங்களை வெளியிட்ட குப்தப்பெருமன்னர்கள் வெள்ளி நாணயங்கள் சிலவற்றையும் வெளியிட்டுள்ளனர். குப்தர்களுள் முதன்முதலாக வெள்ளி நாணயத்தை வெளியிட்ட பெருமை இரண்டாம் சந்திரகுப்தரைச்சாரும். இவரால் வெளியிடப்பட்ட வெள்ளி நாணயங்கள் பெரும்பாலும் மேலை சத்திரப்பர்களது வெள்ளிநாணயங்களின் மாதிரியாகவே உள்ளன. இவற்றுள் ஒரு புறம் குப்தரது ஆண்டும் மறுபுறம் மன்னரின் மார்பளவு உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. முந்தைய குப்தர்களின் ஆட்சிக் காலத்தில் வெள்ளி நாணயங்கள் வெளியிட்டதற்கான சான்றுகள் இதுகாறும் கிடைக்கவில்லை.

குப்தர்களுள் ஸ்காந்தகுப்தர் வெளியிட்ட வெள்ளி நாணயங்கள் மட்டுமே கலப்பில்லாத, சுத்த வெள்ளியில் காணப்படுகின்றன. இதற்கு முன்னர் வெளியிடப்பட்டவை அனைத்தும் கலப்பட உலோகத்தில் செய்யப்பட்ட செம்பு நாணயங்களைப் போன்றுதான் உள்ளன. குமாரகுப்தர் வெளியிட்டுள்ள நாணயங்களில் கருடனுக்குப் பதில் தோகை விரித்தாடும் மயில் இடம் பெற்றுள்ளன. குப்தப்பெருமன்னர்களுள், ஸ்கந்த குப்தரே வெள்ளியில் பல புதுவிதமான நாணயங்களை வெளியிட்ட பெருமைக்குரியவர்.

குப்தவம்சத்தில் கடைசியாக வெள்ளி நாணயத்தை வெளியிட்டவர் புத்த குப்தரே ஆவார். இவை இன்று அரிதாகவே கிடைக்கின்றன.

## செப்பு நாணயங்கள் :

குப்தப்பெருமன்னர்களின் ஆட்சிக்காலத்தில் ஒருசில செப்பு நாணயங்கள் மட்டுமே வெளியிடப்பட்டன. இரண்டாம் சந்திரகுப்தர் முதலாம்குமாரகுப்தர் ஆகிய இரு வேந்தர் காலத்திய செப்பு நாணயங்கள் பல கிடைத்துள்ளன. இவற்றுள் ஏறத்தாழ ஏழுவகையான நாணயங்களே ஆய்வாளரின் பார்வைக்குக் கிடைத்துள்ளன. இவற்றின் ஒரு புறத்தில் அரசு சின்னமான கருடன் பறப்பது போன்றும், அதன் கீழே மன்னரின் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளன.

நாகர்களின் நாணயங்களைப் போன்ற சில செப்பு நாணயங்களும் சேகரிக்கப்பட்டுள்ளன. இராமகுப்தர் எனும் பெயர் பொறிக்கப்பட்ட இச்செப்பு நாணயங்கள் குப்தவேந்தருடையதா? என்பது ஆய்வுக்குரியது.

இங்கு நாம் குப்தர்களின் தனித்தன்மையும் சிறப்பும் வாய்ந்த ஒரு சில நாணயங்களைப் பற்றிக் காண்போம்.

## 1. முதலாம் சந்திரகுப்தரின் தங்க நாணயம் :

முன்புறம் ஒருவரை ஒருவர் எதிர் நோக்கியுள்ள நிலையில் அரசரும் அவரது தேவியும் சித்தரிக்கப்பட்டுள்ளனர். இதன் இடது புறத்தில் ஸ்ரீகுமாரதேவி எனும் வாசகமும், மன்னரின் வலது கைக்குக் கீழ்புறத்தில் சந்திரகுப்தர் எனும் வாசகமும் பொறிக்கப்பட்டுள்ளன. காசின் மறுபுறத்தில் சிங்கத்தின் மீதமர்ந்துள்ள பெண் தெய்வத்தின் திருவுருவம் உள்ளது. இத்தெய்வம் தனது இடது கரத்தில் வளத்தின்

சின்னத்தைத்தாங்கியுள்ளது. வலது கரத்தில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

## 2. சமுத்திரகுப்தரின் தங்க நாணயம் :

முன் பக்கத்தில் பலிக்கம்பத்திற்கு முன்னால் இடது சாயலாக நின்றநிலையில் குதிரை, இதனைச் சுற்றிலும் 'ராஜாதிராஜபித்தவிம் ஆவித்தவாதிலும் ஜெயத்தயா அப்ரதிரவரமவீர' எனும் வாசகம்பொறிக்கப்பட்டுள்ளன. நாணயத்தின் பின்பிறத்தில் வலதுகரத்தில் வெண்சாமரத்தை ஏற்றி அதனை வலது தோளுக்குமேல் உயர்த்திப் பிடித்துக்கொண்டு இடது சாயலில் நிற்கும் ராணி, ராணியின் இடப்பக்கத்தில் ஈட்டியும் 'அஸ்வமேத பராகரமா' எனும் வாசகமும் பொறிக்கப்பட்டுள்ளது. இந்நாணயத்தின்மூலம் சமுத்திரகுப்தர் அசுவமேதயாகம் செய்தமை புலனாகும். அதன் நினைவாகவே இக்காசு வெளியிடப்பட்டது.

## 1. இரண்டாம் சந்திரகுப்தரின் தங்கக்காசு :

முன்புறத்தில் மன்னர் இடது கரத்தில் வில்லும் வலது கரத்தில் அம்பும் தாங்கி இடது சாயலாக நிற்கிறார். இடது பக்கத்தில் கருடனின் சின்னம் கொண்ட கொடி, இடது கரத்திற்குக் கீழ் 'சந்திரன்' எனும் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. 'தேவ ஸ்ரீ மகாராஜாதி ராஜஸ்ரீசந்திரகுப்த' எனும் வாசகமும் காணப்படுகிறது, இந்நாணயத்தின் பின்புறம் 'க்ருதாந்தபரசுர் ஜயத்யஜிதராஜே ஜெதாஜிதா ஸ்ரீவிக்ரம' எனும் வாசகம் பொறிக்கப்படுள்ளது.

## 2. இரண்டாம் சந்திரகுப்தரின் தங்கக்காசு :

ஒரு பக்கத்தில் மன்னர் தனது இடக்கரத்தில் அம்பைப் பிடித்துக்கொண்டு. வலக்கரத்தால் அதிலுள்ள நரம்பைத் தன் காதுவரையில் இழுத்து, சிங்கத்தை வேட்டையாடும் காட்சி. இதன் இடது புறத்தில் 'நரேந்திர சந்திர பிரதிதரேணேரணே ஜெயத்யா ஜ

புலி சிம்ம விக்ரம்' எனும் வாசகம் எழுதப்பட்டுள்ளது. நாணயத்தின் பின்புறம் தனது வலக்கரத்தில் தாமரை மலரை ஏந்தியும் இடது கரத்தைச் சிங்கத்தின் மீது வைத்துக்கொண்டு அதன்மீது சவாரி செய்யும் நிலையிலும் பெண் தெய்வம் காட்டப்பட்டுள்ளது. 'சிம்ம விக்ரம்' எனும் வாசகமும் பொறிக்கப்பட்டுள்ளது.

## 1. முதலாம் குமார குப்தரின் தங்கக்காசு :

முன்புறத்தில் மன்னர் வில்லும் அம்பும் கொண்டு புலியைத் தாக்கும் உருவம் இடது சாயலில் உள்ளது. இடதுகரத்திற்குக்கீழ் 'கு' எனும் எழுத்தும் அதற்கு மேலே சந்திரனும் காட்டப்பட்டுள்ளன. அருகில் 'ஸ்ரீமான் வியாக்ர பல பராக்ரம்' எனும் வாசகமும் பொறிக்கப்பட்டுள்ளது. பின்புறத்தில் இடது கரத்தில் தாமரை மலரை ஏந்தி, முக்காலியில் இடது சாயலாக அமர்ந்து கொண்டு, மயிலுக்குப் பழம்ஊட்டும் பெண் தெய்வத்தின் உருவம் சித்தரிக்கப்பட்டுள்ளது. 'குமாரகுப்தோதிராஜ' எனும் வாசகமும் பொறிக்கப்பட்டுள்ளது.

## 2. முதலாம் குமார குப்தரின் தங்கக்காசு :

முன்புறத்தில் இடது சாயலாக நின்ற நிலையில் வலது கரத்தில் உள்ள பழங்களை மன்னர் மயிலுக்கு ஊட்டும் காட்சி "ஜெயதி ஸ்வகுணைர் குணராசி மகேந்திகுமார்' எனும் வாசகம். பின்புறம் தனது தோளுக்குமேல் இடது கரத்தில் வேலை ஏந்திக் கொண்டு மயில் மீது அமர்ந்துள்ள ஸ்ரீ கார்த்திகேயன் (திருமுருகன்) திருவுருவம்; இடது சாயலாக 'மகேந்திர குமார' எனும் வாசகம்.

## 2. முதலாம் குமாரகுப்தரின் தங்கக்காசு :

முன்புறம் மன்னர் குதிரை மீதமர்ந்து கொண்டு தனது வலக்கரத்தால் வாள் கொண்டு காண்டா மிருகத்ததைத்தாக்கும்

காட்சி தத்ரூபமாகத் தீட்டப்பட்டுள்ளது. 'பர்த்த கட்கத்ரதா குமாரகுப்தோ ஜயத்யானிசம்' எனும் வாசகம். பின்னால் பணிப்பெண் ஒருத்தி வெண்சாமரம் ஏந்தி நிற்கிறாள். 'ஸ்ரீமகேந்திர கட்க' எனும் வாசகம்.

## 3. ஸ்கந்த குப்தரின் தங்கக்காசு :

முன்புறம் தனது இடக்கரத்தில் வில்லும் வலக்கரத்தில் அம்பும் ஏந்தி இடது சாயலில் வலப்புறம் பார்த்து நிற்கும் மன்னர், வலக்கரத்தில் கிளியை ஏந்தி நிற்கும் ராணி அரசனை நோக்குகிறார். மன்னருக்கும் ராணிக்கும் மத்தியில் கருடக்கொடி. 'ஜயதி மஹிதலம் ஸ்கந்த குப்தோ சுதன்வீ ' எனும் வாசகம் பின்புறம் தாமரையின் மீது அமர்ந்துள்ள பெண் தெய்வம் தன் இடது கரத்தில் தாமரை மலர் ஒன்றை ஏந்தி உள்ளாள். இதில் ஸ்ரீஸ்கந்தகுப்த எனும் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது.

## 4. முதலாம் குமாரகுப்தரது வெள்ளிக்காசு :

இக்காசு மேற்இந்தியப் பகுதியில் புழக்கத்தில் இருந்தது. முன்புறம் மன்னரின் தலை வலது சாயலில் உள்ளது. வலது புறத்தில் சீர் கெட்டுப்போன கிரேக்க வாசகம் பின்பற்றப்பட்டுள்ளது. பின்புறம்; கருடன் நேராகப் பார்க்கும் நிலையில் உள்ளது. சுற்றிலும் 'பரமபாகவத மகாராஜாதிராஜ குமாரகுப்த மகேந்திராதித்ய' எனும் வாசகம் உள்ளது. முதலாம் குமார குப்தரது மற்றொரு வெள்ளிக்காசின் பின்புறம் தோகை விரித்தாடும் மயில் ஒன்று வரையப்பட்டுள்ளது.

# 7. பாண்டியர் நாணயங்கள்

**முன்னுரை :**

தமிழக மூவேந்தருள் தொன்மை மிக்கவர் தமிழ் வளர்த்தவர் பாண்டியர். தற்காலத்திய மதுரை, திண்டுக்கல், விருது நகர், திருநெல்வேலி மாவட்டங்களே அந்நாளில் பாண்டி நாடு ஆகும். பாண்டிய நாட்டை ஆண்டு வந்த பாண்டியரை நாம் 1. சங்ககாலப் பாண்டியர் 2. கடுங்கோன் வழிப் பாண்டியர் (முதலாம்பாண்டியப் பேரரசு) 3. இரண்டாவது பாண்டியப் பேரரசுப் பாண்டியர் 4. பிற்காலப் பாண்டியர் (தென்காசிப் பாண்டியர்) என்று நான்கு பிரிவினராகப் பகுக்கிறோம். இந்நான்கு பிரிவினரும் தமது ஆட்சிக் காலத்தில் பல நாணயங்களை வெளியிட்டு வாணிபத்தைப் பெருக்கினர். இங்கு நாம் இவர்கள் வெளியிட்ட நாணயங்களைப் பற்றிக் காண்போம்.

பாண்டியரது நாணயங்களைப் பற்றி அறிந்து கொள்ள நமக்குத் துணை புரிவது 1888ஆம் ஆண்டு மறைத்திரு. லோவன்தால் பாதிரியாரால் வெளியிடப்பட்ட திருநெல்வேலி நாணயங்கள் என்னும் நூலேயாகும். முதன் முதலாக வெளியிடப்பட்ட இந்நூலில் பழைமையான பாண்டியரது செப்பு, சதுர வடிவ நாணயங்களின் வரைபடங்களைக் காணலாம். அடுத்து 1933 ஆம் ஆண்டில் திரு.டி. தேசிகாச்சாரி அவர்கள் 'தென்னிந்திய நாணயங்கள்' என்னும் நூலில் பாண்டியரது செவ்வக வடிவிலான நாணயங்களைப் பற்றி ஆய்வு செய்துள்ளார். இதில் பாண்டியரது நாணயங்கள் 12 மட்டுமே இடம் பெற்றுள்ளன. 1966 ஆம் ஆண்டில் பாண்டியரது நாணயங்கள் பற்றிய விளக்கங்கள் உள்ளன. இவை யாவும் சங்க காலப் பாண்டியரின் நாணயங்களே என்பதில் ஐயமில்லை. அண்மையில் தினமலர் ஆசிரியர் திரு. ஆர்.

கிருஷ்ணமூர்த்தி அவர்கள் 'பாண்டியர் பெருவழுதி நாணயங்கள் (1987) என்னும் ஆய்வு நூலை வெளியிட்டுள்ளார். அண்மையில் (1997) இவரால் வெளியிடப்பட்ட 'சங்ககாலத்தமிழர் நாணயங்கள்'(Sangam Age Tamil coins) எனும் நூலில் சங்கப் பாண்டியரின் நாணயங்கள் பற்றிய விரிவான செய்திகள் படங்களுடன் விவரிக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் சங்க காலப் பாண்டியர் வெளியிட்டுள்ள நாணயங்களின் முழு விவரங்களை அறிய முடிகின்றது.

தமிழக மூவேந்தருள் சங்ககாலப் பாண்டியரே முதன் முறையாக வெள்ளி முத்திரை நாணயங்களை வெளியிட்டனர். இவை ஏறத்தாழ நந்தர்களாலும், மோரியர்களாலும் வெளியிடப்பட்ட கர்ஷப் பணம் என்பதனைப் போன்றதாகும். பாண்டியரது இந்நாணயத்தின் ஒரு பக்கம் மீன் சின்னம் உள்ளது. மறுபுறம் சூரியன் மற்றும் பல மங்கலச் சின்னங்கள் காணப்படுகின்றன.

## சங்ககாலப் பாண்டியரின் நாணயங்கள் :

சங்ககாலப் பாண்டியரின் வெள்ளி முத்திரை நாணயங்களைப்பற்றிச் சென்ற பத்தியில் கண்டோம். இவை ஏறத்தாழ கி.மு. இரண்டாம் நூற்றாண்டினளவில் வெளியிடப் பெற்றிருக்கலாம். சங்க காலப் பாண்டியரின் செப்பு நாணயங்கள் பல நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றை நாம் ஆறு வகையாகப் பகுக்கலாம். அவைமுறையே 1 குதிரை, தொட்டி, ஆமை, சின்னங்கள் 2. யானை தொட்டி, ஆமை பொறிக்கப்பட்டவை. 3. கோயில், ஆமை சின்னங்கள் பொறிக்கப்பட்டவை. 4. பெருவழுதி பெயர் பொறிக்கப்பட்டவை. 5. பெருவழுதி காலத்திய வெள்ளி நாணயங்கள். 6. பெருவழுதியின் தலை வடிவம் கொண்டவை. இவை அனைத்துமே பாண்டியரது நாணயங்கள் என்பதனை ஒரு புறம்மீன் சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளதால் அறியலாம்.

சங்கப்பண்டியரின் புதுவகையான காசு : 1990 91ஆம் ஆண்டில் தமிழ்நாடு தொல்லியல் துறையினர் அழகன்குளத்தில் அகழாய்வு செய்தபோது நீள்சதுர செப்புக்காசு ஒன்று கிடைத்து. இதில் ஒரு பக்கம் மீன் உருவமும் மறுபக்கம் திமிலோடு கூடிய காளை உருவம் நின்ற நிலையில் உள்ளது காளையின் முகத்திற்குக கீழே தொட்டி காணப்படுகிறது. ஆரப்பா, மொஞ்சதாரோ நாகரித்தைச்சேர்ந்த காளையின் உருவத்தோடு இதனை ஒப்பிடலாம். இது கி.மு. 4 அல்லது 3ஆம் நூற்றாண்டினதாகலாம் என்று நடன காசிநாதன் அவர்கள் கருதுகிறார்[○]

முதலாவது வகை நாணயங்களில் ஒருபுறத்தில் இடப்புறம் நோக்கி நிற்கும் குதிரை ஒன்று நின்ற நிலையில் உள்ளது. இதன் எதிரில் தொட்டியும் அதில் ஆமைகளும் உள்ளன. குதிரைக்கு மேல் 'டவுரின்' சின்னங்கள் உள்ளன. காசின் மறுபுறம் மீன் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது வகை நாணயங்களில் குதிரைக்குப் பதில் யானை பொறிக்கப்பட்டுள்ளது. யானைச் சின்னத்திற்குக் கீழே தொட்டியும் ஆமைகளும் உள்ளன. யானையின் இடது பக்கத்திற்கு மேல் வேலியிட்ட மரத்தின் தொட்டி மட்டும் காட்டப்பட்டுள்ளது. தொட்டியின் கீழ் சில புள்ளிகள் உள்ளன. காசின் பின்புறம் மீன் சின்னம் உள்ளது. இதில் மீன் முக்கோணவடிவில் சித்திரிக்கப்பட்டுள்ளது. வேறு சில நாணயங்களில் வேலியிட்ட மரம், மலை முகடுகள், மீன் சின்னம், மீன் குறியீடு ஆகியன காசின் முன்புறம் காட்டப்பட்டுள்ளன. பின் புறம் இணைக்கயல் பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வகை நாணயங்கள் ஒவ்வொன்றிலும் காணப்படும் சின்னங்கள் ஒவ்வொரு விதமாக உள்ளன.

---

○ கஅழகன்குள அகழாய்வில் கிடைத்த சங்க காலப்பாண்டியாரின் அரிய காசு கல்வெட்டு. காலாண்டிதழ், 37, பக் . 37.

### மூன்றாம் வகை நாணயங்கள் :

நாணயத்தின் ஒரு பக்கம் மலை முகடு, வேலியிட்ட மரம், யானை, கொடிமரம் ஆகிய சின்னங்களும், மறுபுறத்தில் பாண்டியரது மீன் சின்னமும் பொறிக்கப்பட்டுள்ளன.. சில நாணயங்களில் கோயில், யானை, மூன்று வளைவு கொண்ட மலை முகடு, வேலியிட்ட மரம், தொட்டியில் ஆமை, குதிரை ஆகிய சின்னங்கள் ஒரு புறமும், மறுபுறம் மீன் இலட்சினையும் பொறிக்கப்பட்டுள்ளது,

### நான்காம் வகை நாணயங்கள் :

பாண்டியர் மரபில் பல கிளைப் பிரிவுகள் உள்ளன அவற்றுள் வழுதியும் ஒன்று. இக்கிளைப் பிரிவைச் சேர்ந்த பாண்டிய வேந்தர்கள் தங்களது பெயர்களின் பின்னால் வழுதி, பெரு வழுதி முதலான பட்டப்பெயர்களைப் புனைந்து கொண்டனர். இவர்களுள் நால்வரைப்பற்றி சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவர்களுள் பல்யாக சாலை முது குடுமிப் 'பெருவழுதி' தலைசிறந்தவன் ஆவான்.

'பெருவழுதி' எனும் வாசகம் தமிழ் பிராமி எழுத்து வடிவத்தில் பொறிக்கப்பட்ட பல காசுகள் அண்மைக்காலத்தில் கிடைத்துள்ளன. இந் நாணயங்கள் சதுர வடிவிலும், அறு பக்க வடிவிலும் கிடைத்துள்ளன. இவையனைத்தும் செம்பால் ஆனவை. அறுபக்க வடிவிலான காசில் முன்புறம் குதிரை, தொட்டியில் ஆமை, 'பெருவழுதி' எனும் வாசகம் ஆகியவை உள்ளன, இதன் மறுபுறத்தில் இணைக் கயல்களின் சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

சதுரக்காசுகளிலும் மேற்கூறப்பட்ட உருவங்களே உள்ளன. குதிரை மட்டும் பெரிய உருவில் தீட்டப்பட்டுள்ளது. இக்காசுகளில் பெருவழுதி என்னும் பெயர் பொறிக்கப்பட்டுள்ளதால், இவை

பாண்டியர் காலத்தவை என்பதனை நாம் உறுதியாக நம்பலாம். எழுத்துக்கள் தமிழ் பிராமியில் உள்ளதால் இவை முந்தைய தமிழின் வடிவமே என்பதைனையும் அறியலாம்.

## ஐந்தாவது வகை நாணயங்கள் :

இவ்வகை நாணயங்களில் வேள்வித் தொடர்பான உருவங்கள் சில உள்ளன. எனவே பெருவழுதி வேந்தன் அசுவமேத யாகம் புரிந்ததன் நினைவாக இவை வெளியிடப் பெற்றிருத்தல் கூடுமென்று ஊகிக்கலாம். சதுரவடிவிலான இக்காசுகளில் குதிரை, வியூபத்தம்பம், வேலியிட்ட மரம், நந்திபாதம், யாககுண்டம் முதலான உருவங்கள் ஒரு புறமும், மீன்சின்னம் மறுபுறமும் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றில் 'பெருவழுதி' எனும் பெயர் பொறிக்கப்பெறவில்லை. இருப்பினும் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி யாகங்கள் புரிந்ததாக இலக்கியச்சான்றுகள் செப்புகின்றன, மீன் சின்னமும் காசின் பின்புறம் உள்ளது. எனவே வேள்வியைக்குறிக்கும் இந்நாணயங்களும் இவ்வேந்தரது ஆட்சிக்காலத்திலேயே வெளியிடப்பெற்றன எனலாம்.

## ஆறாவது வகை நாணயங்கள் :

இவ்வகை நாணயங்களின் சிறப்பு யாதெனில் அரசனது, தலைவடிவம் அதாவது முகம் பொறிக்கப்பட்டுள்ளது தான். முகம் அழகாகவும் தெளிவாகவும் உள்ளது. கிரேக்கர்களும், உரோமர்களும் தலை வடிவு நாணயங்களை வெளியிட்டுள்ளனர் இவற்றைப் பின்பற்றியே பாண்டியரும் தமது நாணயங்களில் தமது தலைகளைப் பொறித்துள்ளனர் எனக் கருதலாம். இவை சதுர வடிவிலான செப்பு நாணயங்கள் ஆகும். இந்த நாணயங்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் கடைப் பகுதியில் வெளியிடப் பெற்றிருத்தல் வேண்டும் எனக் கருதலாம்.

## கடுங்கோன் வழிப் பாண்டியர் காசுகள் :

இக் காலக் கட்டத்தில் பல வகையான நாணயங்கள் புழக்கத்தில் இருந்தன என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகளால் அறிகிறோம். இக்காலப் பாண்டிய வேந்தர்கள் தங்கம், வெள்ளி, செம்பு, நாணயங்களை வெளியிட்டுள்ளனர். அவற்றுள் சில ஆய்வாளர்களின் பார்வைக்கு வந்துள்ளன. இருப்பினும் தங்க நாணயங்கள் அருகியே காணப்படுகின்றன.

சீமாற சீவல்லபன் (9815-862) தனது விருதுப் பெயராகிய 'அவனிப சேகரன்' என்னும் பெயரில் 'அவனிப சேகரன் கொளகை' எனும் நாணயத்தை வெளியிட்டுள்ளான். அடுத்து இரண்டாம் வரகுண பாண்டியனின் (கி.பி. 662- 855) தங்கக் காசொன்று நமக்குக் கிடைத்துள்ளது. இக்காசின் ஒருபுறம் 'ஸ்ரீவரகுணன்' என்னும் எழுத்து கிரந்தத்தில் காணப்படுகிறது. காசின் மறுபுறம் இணைக்கயல் சின்னமும் பொறிக்கப்பட்டுள்ளது. பாண்டிய நாட்டில் காசு, பழங்காசு, பொன், காணம், கழங்சு, மாடை என்னும் பெயருடைய நாணயங்களும் புழக்கத்தில் இருந்தன, வரகுண பாண்டினின் கல்வெட்டைக் கொண்டு ஒரு கழஞ்சு என்பது ஒரு கழஞ்சுக்கும் பத்து பொன்னுக்கும் சமமானது என்பது கல்வெட்டுக்களால் அறிப்படுகின்றன. பாண்டியரது ஆட்சிக் காலத்தில் செப்பு நாணயங்களே அதிக அளவில் வெளியிடப்பட்டன. கத்யாணா, திரமம் என்னும் நாணயங்களும் பாண்டிய நாட்டில் புழக்கத்தில் இருந்தன.

தொடக்க காலத்தில் இவர்கள் முத்திரையிட்ட வெள்ளி நாணயங்களையும், ஒரே அச்சில் அடித்த செப்பு நாணயங்களையும் வெளியிட்டனர்.

## இரண்டாவது பாண்டியப் பேரரசு :

பாண்டியர் வரலாற்றில் இரண்டாவது பாண்டியப் பேரரசர்களின் ஆட்சிக் காலம் ஓர் வசந்த காலம். இக்காலக் கட்டத்தில் பாண்டியரின் பெயரும் புகழும் தென்னிந்தியா முழுவதும் பரவியது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டின் (கி.பி. 1216 1239) இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1238-1251),முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1261 -1271) ஆகிய வேந்தர்கள் பேரரசர்களாகத் திகழ்ந்தனர்; பல விருதுப் பெயர்களில் காசுகளை வெளியிட்டனர். பழமுதல் ஆணை அச்சு, புதுக்குளிகை பணம் (அன்றாட நற்புதுக்காசு) தனபாலன் குளிகை (பழம் சோழியக்காசு) ஆகிய நாணயங்கள் பாண்டிய நாட்டில் புழக்கத்தில் இருந்தனைக் கல்வெட்டுக்கள் மூலம் அறிகிறோம். சடையவர்மன் சுந்தரபாண்டியன் பல மாநிலங்களை வென்றதனால் 'எல்லாந்தலையான' என்ற தனது விருதுப் பெயர் விளங்க நாணயங்களை வெளியிட்டு, அவற்றில் 'எல்லாந்தலை' 'எல்லாந்தலையானான்' எனப் பொறித்தான் இவ்வேந்தன் 'கச்சி வழங்கும் பெருமாள்' 'கலியுகராமன்' என்னும் பெயர் பொறித்த நாணயங்களையும் வெளியிட்டான்.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் 'சோணாடு கொண்டான்' என்னும் நாணயத்தைத் தனது சோழநாட்டு வெற்றியின் சின்னமாக வெளியிட்டான். முதலாம் மாறவர்மன்

சுந்தரபாண்டின் 'சுந்தர' 'சுந்தரபாண்டிய' 'சு' என்னும் வாசகங்கள் பொறிக்கப்பட்ட செப்பு நாணயங்களை வெளியிட்டான். 'சுந்தர' எனும் பெயர் பொறித்த நாணயங்கள் கரூரிலும் கிடைத்துள்ளன. அவனி வேந்தராமன், அவனிப சேகரன், அவனிவென்றான், வீரபாண்டியன், கோதண்ட ராமன். குலசேகரன எனும் பெயர் பொறிக்கப்படட நாணயங்களும் இவர்களால் வெளியிடப்பட்டன. கலியுகராமன், குலசேகர,

பரசுராம, ஆகிய நாணயங்களும் பாண்டியருடைய தேயாகும். குல சேகர' நாணயத்தில் ஒரு புறம் நின்ற நிலையில் அரசன் உள்ளான். மறுபுறம் மீன்சின்னம் உள்ளது, மன்னன் உருவம் உள்ள பக்கத்தில் 'எல்லாம் தலையானான்' எனும் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

பாண்டிய நாட்டில் சோழரது ஆட்சி ஏற்பட்டபோது, சோழரது வட்டவடிவக் காசுகளும் அங்கு புழக்கத்திற்கு வந்தன. இலங்கை வேந்தனாம் பராக்கிரம பாகு மதுரையைக் கைப்பற்றி, ஆட்சியை அவனது நண்பனான குல சேகர பாண்டியனிடம் ஒப்படைத்தபோது, இலங்கை நாட்டின் கஹபணம் என்னும் காசும் பாண்டிய நாட்டில் புழக்கத்தில் இருந்ததனை அறியலாம்.

## தென்காசிப் பாண்டியர் :

தென்காசிப் பாண்டியரும் பல நாணயங்களை வெளியிட்டனர். அவற்றுள் 'நென்மேனி கலியுகராமன்' எனும் பெயர் கொண்ட நாணயம் குறிப்பிடத்தக்கது இதனை கி.பி. 1413 இல் திருநெல்வேலியில் பெருமாள் வீராபாண்டியன் என்பான் வெளியிட்டான். மதுரை மண்டலத்தில் சில காலம் மதுரை சுல்தான்களின் நாணயங்களும் புழக்கத்தில் இருந்தன. பாண்டிய நாடு விசய நகரப் பேரரசனின் ஆட்சிக்குட்பட்ட பின்னர். விசய நகரத்தாரது காசுகளே பெருவழக்காயிற்று.

## இ. சேரர் நாணயங்கள்

தமிழக மூவேந்தருள் சேரர் குறிப்பிடத்தக்கவர். இவர்கள் சங்க காலத்தில் மிக்க புகழுடன் ஆட்சி புரிந்தனர். கரூர் மாவட்டத்தலைநகரான கரூர் (வஞ்சி) இவர்களது கோநகராகத் திகழ்ந்தது. இவர்கள் பழங்கால முதற்கொண்டே பலவிதமான நாணயங்களை வெளியிட்டுள்ளனர். இவற்றுள் பொன், வெள்ளி, ஈயம், செம்பு நாணயங்கள் அடங்கும்

### முத்திரைக்காசு :

கி.மு.5ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2ஆம் நூற்றாண்டின் இறுதிவரை இந்தியாவின் பல பகுதிகளில் எழுத்துப் பொறிப்பு இல்லாத சிறுசிறு முத்திரை உருவங்களோடு கூடிய காசுகள் பல வடிவங்களில் வெளியிடப்பட்டன. சேரரும் வடஇந்திய வேந்தர்கள் வெளியிட்ட வெள்ளி முத்திரைக்காசுககளைப் போன்று, ஐந்து முத்திரைகளைக் கொண்ட வெள்ளி முத்திரைக் காசுகளை வெளியிட்டனர் கரூர் அமராவதி ஆற்றுப்படுகையில் ஐந்து சின்னங்களைக் கொண்ட வெள்ளி முத்திரைக் காசுகள் சில கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றின் முன்புறம் அறுவளைவு முகடு, சூரியன் சந்திரன், ஸ்தூபம், தொட்டிக்குள் மீன் ஆகிய ஐந்து சின்னங்கள் உள்ளன. பின் புறம் சேரரின் அரச முத்திரையான வில்லும் அம்பும் பொறிக்கப்பட்டுள்ளன இதன் மீது பிறைச்சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது. இதனால் பிற வேந்தர்களைப் போன்று சேரர் முத்திரைக்காசுகளையும் வெளியிட்டுள்ளமை புலனாகும். இவை அச்சு குத்தப்பெற்ற காசுகள் எனவும் அழைக்கப்பெறுகின்றன.

### செப்புக்காசு :

சேரர்கள் ஏராளமான செப்புக்காசுகளை வெளியிட்டுள்ளனர். செவ்வக, சதுர வடிவிலான இவற்றின் ஒரு புறத்தில் வலது புறம் தமிழி எழுத்துக்களும், மறுபுறம் சேரரின்

அரச சின்னமான வில், அம்பு, அங்குசம் ஆகியவையும் பொறிக்கப்பட்டுள்ளன. கரூரில் கண்டெடுக்கப்பட்ட காசுகள் அனைத்திலும் யானைக்கு மேல், மங்கலச் சின்னங்கள் தான் பொறிக்கப்பட்டுளளன. சில காசுகளில் எழுத்துக்கள் தெளிவின்றி காணப்படுகின்றன. எனவே இவற்றை வெளியிட்ட சேர மன்னர் யார்? என்பது புலனாகவில்லை. இக்காசுகளில் வில்லும் அம்பும் பல மாதிரியாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இருப்பினும் இவை ஆறுவகையின என்பது அறியப்படுகின்றது. சிலவற்றில் வில்லுக்கு அருகில் அங்குசம் காட்டப்படவில்லை. கரூரில் ஏறத்தாழ ஆறாயிரத்துக்கு மேற்பட்ட சேரரது செப்புக் காசுகளும் இருநூற்றுக்கும் மேற்பட்ட வெள்ளிக்காசுகளும் கிடைத்துள்ளன. எழுத்து பொறிக்கப்படாத இக்காசுகள் முதல் வகையினவாகும்.

சேரர் செப்புக்காசுகளில் காளைவடிவம் பொறிக்கப்பட்டவையும் உள்ளன. இவற்றுள் சில கரூர் அமராவதிப்படுகையில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் இரண்டு காசுகள் குறிப்பிடத்தக்கன. ஒரு செப்புக்காசில் ஒரு புறம் நின்றநிலையில் காளை உருவமும், கீழே கலப்பையும் காட்சி தருகின்றன. மறுபுறம் வில், அம்பு, அங்குசம், ஆகியவை காணப்படுகின்றன.

மற்றொன்றில் ஒரு புறம் காளை நிற்கிறது. மறுபுறத்திலோ வில், அம்பு, அம்பின இருமருங்கிலும் ஸ்வஸ்திக் சினனம், அங்குசம் ஆகியவை பொறிக்கப்பட்டுள்ளன.

குதிரை பொறிக்கப்பட்ட சங்ககாலச் சேரர் காசு ஒன்றும் கரூரில் கிடைத்துள்ளது. இதன் ஒரு புறத்தில் குதிரையும், குதிரையின் முன் சூலமும் உள்ளன. சூலத்தின் கீழ் பரசு, கட்டாரி உள்ளன.குதிரையின் மேல் காளை உருவம் காணப்படுகிறது. பின்

புறம் சேரர்க்கே உரிய வில், அம்பு, அங்குசம் ஆகியன பொறிக்கப்பட்டுள்ளன

யானை, கரனை, குதிரை எதுவும் பொறிக்கப்பெறாமல் வில் அம்பு மட்டுமே பொறிக்கப்பட்டுள்ள காசும் கரூரில் கிடைத்துள்ளது. இதன மறுபுறம் மரம் உள்ளது.

இவற்றின்காலம் ஏறத்தாழ கி.மு முதல் நூற்றாண்டு எனககணிக்கப்பட்டுள்ளது*

**மாக்கோதைக் காசுகள்**

இவ்வ இரணடாண் வகையினைச் சேர்ந்தவை. கரூர் அமராவதி ஆற்றின கரையில் கிடைத்துள்ள சேரர் காசுகளுள் 'சேரமான் மாக்கோதை'யின பெயருடனும உருவத்துடனும் காணப்படும் காசு மிகவும் குறிப்பிடத்தககது. கரூரில் ஐநது வகையான உருவத்தில சேரமான் தலை வடிவம் பொறிககப்பட்டுள்ள காசுகள் கிடைத்துள்ளன.

இக்காசின ஒரு புறத்தில் தமிழி எழுததுக்களும், அதன் கீழே மத்தியில் வலப்புறம் நோககிய மனனனின் மார்பளவு வடிவமும் உள்ளன மறுபுறம் சினனஙகள் ஏதுமின்றி வழவழப்பாக உள்ளது. மனனனின தலைககு மேல் 'மாக்கோதை' ( Makkotai) எனறு பொறிக்கபபட்டுள்ளது எழுததமைதி கொண்டு இது கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்குதியைச் சார்ந்தது எனலாம்.

திரு. கிருஷ்ணமூர்ததி அவர்கள் ஐநது வகையான (Types) மாககோதைககாசுகளின படங்களைததனது ஆயவுக்கட்டுரையிலும் நூலிலும் வெளியிட்டுள்ளார்*

*ஆறுமுக சீதாராமன 'சஙககாலககாசுகள்' ஆவணம.
இதழ் 8. 1997. பக 130

※ First Oriental Numismatic Congress - Nagpor 29-10-1990

மாக்கோதை வெள்ளிக்காசுகளில் உள்ள எழுத்துகள் நெடுஞ்செழியப் பாண்டியன் பற்றிக்குறிப்பிடும் மாங்குளம் கல்வெட்டின் எழுத்துகள் போன்று உள்ளதையும் அவர் சுட்டிக்காட்டியுள்ளார்.

காசில் மாக்கோதை மன்னர், மொட்டைத் தலையராகக் காட்டப்பட்டுள்ளார்; காதிலும் கழுத்திலும் ஆபரணங்கள் ஏதுமில்லை ஐந்து மாக்கோதை தலைவடிவங்களும் ஒன்றுக் கொன்று மாறுபடுவதால் ஐந்து அரசர்கள் மாக்கோதை எனும் பெயரில் ஒருவர்பின் ஒருவாராக 125 ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததாக திரு.R. கிருஷ்ண மூர்த்தி அவர்கள் கருதுகிறார். இதுகாறும் சாதவாகனரே வெள்ளிகிகாசுகளை முதன் முதலாக வெளியிட்டதாகக்கருதப்பட்டது. ஆனால் மாக்கோதைக்காசு கண்டுபிடிக்கப்பட்டதால், வெள்ளிக்காசுகளை முதலில் வெளியிட்ட பெருமை பாண்டியரையே சாரும் என்பது அறியலாகிறது. மார்கோதை சேரர் காசு தமிழக நாணயவியல் வரலாற்றில் ஒரு புரட்சியைத் தோற்றுவித்தது எனலாம். இம்மாக்கோதை புறநானூறு 5ஆம் பாடலில் குறிக்கப்பெற்றுள்ள சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை ஆகலாம்.

## இரும்பொறைக்காசுகள் :

இவை சேரர் காசுகளுள் மூன்றாம் வகையினதாகக் கருதலாம். சங்கச் சேரர் வரலாறு இன்னும் தெளிவாக அறியப்படவில்லை. இருப்பினும் இருவழிச் சேர மரபினர் ஒரே காலத்தில் இருவேறு பகுதிகளில் ஒற்றுமையுடன் ஆட்சி புரிந்தனர் எனக் கருதலாம். பொறையர்குலத்து முதல்வனாக்கருதப்படுபவன் அந்துவன் சேரல் இரும் பொறை. இவனது காலம் துல்லியமாகக் கணிக்கப்பெறவில்லை. இவர்கள் பதிற்றுப் பத்தில் 7,8,9,

பத்துக்களில் புகழப்பட்ட வேந்தர்கள் ஆவார் கணைக்கால் இரும்பொறையுடன் இவர்களது ஆட்சி சங்க காலத்தில் முடிவடைகிறது. குட்டுவன் மரபினரும சேரநாட்டை ஆண்டனர்.

இரும்பொறை மரபுனரும் வேந்தரது இரு வகையான எழுத்துடன கூடிய காசுகள் கரூரில் கிடைத்துள்ளன.

## கொல்லிப்பொறை காசு :

சேரர் வரலாற்றில் புத்தொளி பாயச்சும் இக்காசின ஒரு புறத்தில் தோரணவாயிலின உள்ளே ஓர் மன்னனின நின்ற தோற்றம் உள்ளது. காசின விளிம்பில் தமிழி எழுத்துக்களில் "கொல் ஈப்புறை" என்று பெயர் பொறிககபபட்டுள்ளது அதனருகில் கரைகளுககிடையில நீரில் இரு மீனகள் நீந்தி விளையாடுகினறன மலையின் வடிவம் வளைவுகளாகக் காட்டப்பட்டுள்ளது. மறுபுறம் சேரரின் வில்லும் அம்பும அழகாக காணபபடுகின்றன.

கொலலிப் பொறையன எனனும் சேர மன்னன் இதனை வெளியிட்டான எனலாம. சேர மனனன கொலலி மலைப்பகுதியை வெனறதன நினைவாகவும் இககாசு வெளியிடப பெற்றிருககலாம்.

## கொல்லிரும் பொறை காசு :

முன்புகண்ட கொல்லிப்புறைக் காசினை இககாசு ஒததுள்ளது. கொலலிப்புறையன எனபபெயா பொறித்த காசும் கரூரில் கிடைதுள்ளது. கொல்லிரும் பொறைககாசு வட்டவடிவமாகவும், தடித்தும், வேறு சில சினனங்களைத் தனகைதத்தே கொணடும் விளங்குகிறது

காசின முனபுறம் தோரணவாயிலின மத்தியில கமபீரமான தோற்றததுடன மன்னனின முழு உருவம பொறிக்கப்பட்டுள்ளது. மனனர் தனது வலக்காரத்தில் போர்ககருவி ஒன்றை ஏநதியுள்ளார். மனனரது இடது புறம நெடிய வேலியிடட மரம ஒன்றும, வலப்புறம்

மூன்று மீன்கள் ஒன்றன் பின் ஒன்றாக மன்னரது நீந்தி வருவது போன்றும் பொறிக்கப்பட்டுள்ளது.

சேரர் காசுகளின் அமைப்பு, சிறப்பு, தனித்தன்மைபற்றி விரிவாகக் காண விரும்புவோர் திரு. கிருஷ்ண மூர்த்தி அவர்கள் அண்மையில் வெளியிட்டுள்ள 'சங்க காலத்தமிழ்க்காசுகள்' (Sangam Age Tamil Coins ) எனும் ஆய்வு நூலில் கண்டு கொள்க இடைக்கால, பிற்காலச் சேரர் காசுகள் பற்றி நான் இந்நூலில் ஆய்வு செய்யவில்லை. கரூரில் சீனம், கிரேக்கம், உரோம், சிரியா, பொனிசியா நாட்டு நாணயங்கள்கிடைத்துள்ளனவெனப்தால், பண்டைய கரூரின் சிறப்பு உணரப்படுகின்றது கரூரில் உரோம் நாட்டு நாணயங்கள் ஆயிரக்கணக்கில் கிடைத்துள்ளதால் தமிழக உரோமானிய வணிக வளர்ச்சிப் புலனாகும்.

## ஈ. பல்லவர் நாணயங்கள் :

தமிழகத்தை ஆண்டு வந்த புகழ்மிகு அரச மரபினருள் பல்லவரும் ஒருவராவர் தொண்டை மண்டலத்தை ஆண்டு வந்த இவர்களது கோநகர் காஞ்சி ஆகும், மாமல்லபுரம் இவர்களது துறைமுகப்பட்டினமாகத்திகழ்ந்தது. குடவரைக் கோயில்கள், ஒற்றைக்கல் தேர்கள், கட்டுமானக் கோயில்கள் ஆகியவற்றைக் கலையழகுடன் நிர்மாணித்தவர் பல்லவர். இவர்கள் பலவகையான கலைநயம் மிக்க காசுகளையும் வெளியிட்டுள்ளனர் இவர்கள் எவ்வகையான காசுகளை வெளியிட்டனர் என்பதனைக்கீழே காண்போம்.

இவர்கள் அதிக அளவில் செப்புக் காசுகளையும் சில தங்க, வெள்ளிக்காசுகளையும் வெளியிட்டுள்ளனர், நந்தி (காளை) இவர்களது அரச சின்னம் எனவே இவர்கள் தமது காசுகளின் ஒருபுறம் நந்தியின உருவத்தைப் பொறித்துள்ளனர். இது படுத்த

நிலையிலோ அல்லது நின்ற நிலையிலோ காணப்படுகின்றது. இதனைச் சுற்றிலும் மன்னனது பெயர் கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இவர்களது செப்புக் காசுகள் மெல்லிய தகடுகளால் தயாரிக்கப்பட்டன.

பல்லவ நாட்டில் பொன், கானம், பணம், கழஞ்சு, மஞ்சாடி, துளைப்பொன், துளை நிறைப்பொன், விடேல் விடுகு பொன் முதலான நாணயங்கள் புழக்கத்தில் இருந்ததனைக் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.

பல்லவவேந்தருள் முதலாம் மகேந்திரவர்மன், முதலாம் நரசிம்மவர்மன் ஆகியோர் தமது பெயரிலும் விருதுப் பெயரிலும் காசுகளை வெளியிட்டுள்ளனர். இது நாள் வரை காடவ, சித்ர, நந்தி, ஸ்ரீபர, ஸ்ரீநிதி, வபு, மானபர, லக்ஷித, ஸ்ரீபரமேசுவர,பகாபிடுகு, நைஹறிகாமுத்திரிக, கடும் பிடுகு, காடவ, வம, அலப்த்த முதலான விருதுப்பெயர்கள் பொறிக்கப்பட்ட பல்லவ வேந்தரது காசுகள் கிடைத்துள்ளன.

முதலாம் மகேந்திரவர்மப் பல்லவனின் காசு ஒன்றில் நைஹறிகாமுதிரிக எனும் விருதுப் பெயர் தமிழ் கிரந்த எழுத்துக்களில் வடமொழியில் எழுதப்பட்டுள்ளது. நைஹறிகா முத்ரிக என்பதற்கு 'சிற்றின்பத்தில் நாட்டம் இல்லாதவன்' எனப் பொருள் கொள்ளலாம். காசின் முன்புறம் நிற்கும் நிலையில் காளையும், 'நைஹறிதாமுத்ரிக' எனும் விருதுப் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது. இதன் பின்புறம் சக்கரம் ஒன்று மலர் இதழ்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. சக்கரம் வட்டத்தின் மத்தியில் காட்டப்பட்டுள்ளது.

முதலாம் மகேந்திரவர்மனின் பல்வேறு விருதுப் பெயர்களுள் 'அலப்தகாம' என்பது ஒன்று 'அலப்த' என்னும்

சமஸ்கிருதச்சொல்லின் பொருள் முழுமை, நிரந்தரம் தோல்வியே காணாத என்பனவாகும். அண்மையில் வட ஆர்க்காடு மாவட்டம் பெண்ணையாற்றுப்படுக்கையில் 'அலப்த' (Alaptha) எனும் பெயர் பொறித்த வெள்ளி நாணயம் ஒன்று கிடைத்துள்ளது. வட்டவடிவம் கொண்ட இக்காசின் முன்புறம் காளை உருவமும் பின்புறம் இருவிளக்குகளுக்கிடையே மேளம் (Drum) ஒன்றும் பொறிறக்கப்பட்டுள்ளது பல்லவ கிரந்தத்தில் பொறிக்கப்பட்டு, 848 கிராம் எடையுள்ள இக்காசு மகேந்திரவர்மனுடையதே என கூறலாம்.

## 'சித்ர' வெள்ளி நாணயம் :

முதலாம் மகேந்திரப் பல்லவனது விருதுப் பெயர்களுள் 'சித்ர காரப்புலி' என்பது புகழ்மிக்கது. பெண்ணை ஆற்றுப்படுகையில் வெள்ளிக்காசொன்று சென்னை சண்முகம் அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. இக்காசின் முன்புறம் நின்ற நிலையில் காளையும், அதன் வலதுபக்கத்தில் 'சித்ர' எனும் விருதுப் பெயர் பல்லவ கிரந்தத்திலும் பொறிக்கப்பட்டுள்ளது. மறுபுறம் வட்டத்திற்குள் பிறை உள்ளது. 'சித்திரகாரப்புலி' என்பதன் சுருக்கமே 'சித்ர' ஆகும். எனவே 799 கிராம் எடையுள்ள இக்காசும் மகேந்திரனுடையதே என நம்பலாம்.

## 'வமா' எனும் வெள்ளி நாணயம் :

கிருஷ்ணகிரியில் 'வமா' எனத்தமிழ் எழுத்தில் பொறிக்கப்பட்ட வெள்ளிக்காசு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதன் ஒரு புறம்காளையும் 'வமா' என்ற விருதும் உள்ளது. மறுபுறம் அலங்கரிக்கப்பட்ட வட்டத்திற்குள் இரு வெண் சாமரங்கள் காணப்படுகின்றன. கி.பி. 7ஆம் நூற்றாண்டின் எழுத்தமைதி கொண்ட இக்காசு, எந்தப் பல்லவ வேந்தனுடையது? என்பது தெரியவில்லை, ஒரு வேளை இது மகேந்திரனுடையதாக இருக்கலாம்.

## மகேந்திரனின் தலைவடிவு வெள்ளி நாணயம் :

உரோமானியரைப் பின்பற்றிப் பல்லவரும் தலைவடிவு நாணயங்களை வெளியிட்டனர். இதில் ஒரு புறம் மன்னனின் மார்பளவு உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. மறுபுறம், ஒன்றும் காணப்படவில்லை இவ்வெள்ளி நாணயம், பகாப்பிடுகு, லக்ஷித எனும் விருதுப்பெயர்கள் பொறிக்கப்பட்ட முதலாம் மகேந்திரவர்மனது காசுகளுடன் ஒரு சேரக்கிடைத்துள்ளதால், இந்நாணயமும் மகேந்திரனுடையதே எனத் துணியலாம். இவ்வட்ட வடிவ வெள்ளி நாணயம் காஞ்சிபுரத்தில் கண்டெடுக்கப்பட்டது. பிற்கால உரோமானியர்களது காசுகளைப் பின்பற்றியே பல்லவரும் இதுபோன்ற காசினை வெளியிட்டதாகக் கொள்ளலாம்.

இராசசிம்மனது (கி.பி. 700-730) நாணயங்களில் ஸ்ரீநிதி, ஸ்ரீபர எனும் விருதுப் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீதர(ன்) ஸ்ரீபர(ன்) எனும் விருதுப் பெயர்கள் பொறிக்கப்பட்ட இராசிம்மனது இரு வெள்ளிக்காசுகள் கரூர் அமாரவதி ஆற்றுப் படுக்கையில் கிடைத்துள்ளன. இதன் ஒரு புறம்காளையும் மறுபுறம் இணைக்கயலும் பொறிக்கப்பட்டுள்ளன.

'ஸ்ரீநிதி' எனும் விருதுப் பெயர் பொறிக்கப்பட்ட வெள்ளிக்காசு ஒன்று பொன்னை ஆற்றங்கரையில் கிடைத்துள்ளது, வலப்புறம் திரும்பிய சாயலில் காளை உருவமும் அதனருகில் 'ஸ்ரீநிதி' என்ற விருதுப் பெயர் பல்லவ கிரந்தத்திலும் ஒரு புறம் பொறிக்கப்பட்டுள்ளது, ஸ்ரீநிதி என்பது இரண்டாம் நரசிம்மனின் விருதுப்பெயராகும். எனவே இது இவ்வேந்தனுடையதே. ஸ்வஸ்திக் உருவம் பொறிக்கப்பட்ட இக்காசு பல்லவர் நாணய வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தை உருவாக்கி உள்ளது.

'மாணபர' எனப்பெயர் பொறிக்கப்பட்ட காசுகள், தெள்ளாறு எறிந்த நந்திவர்மனால் வெளியிடப்பட்டுள்ளன. இவ்வேந்தனது காசுகள் சிலவற்றில் ஒரு புறம் காளையும் மறுபுறம் சங்கும் காணப்படுகின்றன. ஒரே ஒரு காசில் மட்டும் ஒரு புறம் காளையும் மறுபுறம் கப்பல் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வேந்தனது பெரும்பாலான காசுகளில் ஒரு பக்கம் மீன், வில், சங்கு, விளக்கு, கவரி, வெண் கொற்றக்குடை, அசோக மரம், சக்கரம் முதலான சின்னங்கள் காணப்படுகின்றன.

தந்திவர்மனது (கி.பி.796-846) வெள்ளிக்காசுகளும் நமக்குக்கிடைத்துள்ளன. இதன் முன்புறம் காளையும் அதன் மேல்புறம் 'தந்தி' எனும் வாசகமும் பல்லவ கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. மறுபுறம் சக்கரம் பொறிக்கப்பட்டுள்ளது.

## கடும்பிடுகு வெள்ளி நாணயம் :

வடஆர்க்காடு மாவட்டம் பெண்ணை ஆற்றங்கரையில் 'கடும் பிடுகு' எனும் விருதுப்பெயர் பொறிக்கப்பட்ட வெள்ளிக் காசு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது (இதனை ச. இராமனும் சீதாராமனும் ஆய்ந்துள்ளனர்) பல்லவர் நாணய வரலாற்றில் இக்காசு தனித்தன்மை வாய்ந்ததாகவும் சிறப்பானதாகவும் கருதப்படுகிறது.

இக்காசின் முன்புறம் வலப்புறம் திரும்பிய சாயலில் நந்தி (காளை) நின்று கொண்டுள்ளது. இதன் அருகில் கடுபிடுகு (Kadupidugu) எனும் விருதுப் பெயர் தமிழில் எழுதப்பட்டுள்ளது. இதன் மறுபுறம் வட்டத்திற்குள் (Rayed Circle) பன்றியின் உருவம் உள்ளது. நந்தியும், பன்றியும் முறையே பல்லவர், வாதாபிச் சாளுக்கியர் ஆகியோரின் அரச சின்னங்களாகும். முதலாம் நரசிம்மன் சாளுக்கிய நாட்டின் மீதுப் படையெடுத்து, இரண்டாம் புலிகேசியை வென்று, கொன்று (கி.பி. 642-43) வாதாபியைத் தீக்கிரையாக்கினான். எனவே முதலாம் நரசிம்மன் (கி.பி.630-668)

தனது வாதாபி வெற்றியின் நினைவாக இதனை வெளியிட்டான் எனலாம். 'கடும்பிடுகு' என்பதே 'கடுபிடுகு' என பொறிக்கப்பட்டது போலும், பிடுகு என்றால் இடி. கடும்பிடுகு என்பது பயங்கரமான இடி (பேரிடி) எனப் பொருள்படும். முத்தரையர் வரலாற்றில் சித்திரை நிலவாக ஒளிவீசிக் கொண்டிருக்கும் மாவீரன் சுவரன் மாறனும் 'பேரிடி' எனப் பொருள் தரும் 'பெரும்பிடுகு' எனும் விருதுப் பெயரினைப் புனைந்திருந்தான் என்பது இங்கே நினைவு கூறத்தக்கது. இந்நாணயம் 1131 கிராம் எடையும் 1.50 செ.மீ. குறுக்களவும் கொண்டுள்ளது.

## 'காடவ' வெள்ளி நாணயம் :

பெண்ணை ஆற்றுப்படுகையில் 'காடவ' **(Kadava)** எனத்தமிழில் பெயர்பொறிக்கப்பட்ட நாணயமும் கிடைத்துள்ளது. முதலாம் பரமேஸ்வரப் பல்லவன் 'ஐயடிகள் காடவர் கோன்' எனவே இக்காசு முதலாம் பரமேஸ்வரவர்மனுடையதாக இருக்கலாம் என்று சண்முகம், திருச்சிராப்பள்ளி நாணயவியல் சங்கக் கருத்தரங்கில் கருத்துத் தெரிவித்தார் 'காடவ' என்பது பல்லவர்க்குரிய பொதுப் பெயர். எனவே கி.பி. 7ஆம் நூற்றாண்டு எழுத்தமைதிகொண்ட இக்காசு யாருடையது என்பதனை உறுதியாகக் கூறவியலாது என்றே கருதலாம். ('காடவனைக் கருவூரில் கால்கலங்கக் களிறுதைத்த கூடலர்கோன் ஸ்ரீ பராந்தகன்' என்று தளவாய்புரச் செப்பேடு குறிப்பிடுகிறது. எனவே இவன் முதலாம் வரகுண பாண்டியனால் தோற்கடிக்கப்பட்ட தந்திவர்மப் பல்லவன் கி.பி. 775 -825 ஆகலாம்)

இக்காசின் ஒரு புறம், வலப்புறம் திரும்பி நின்றநிலையில் உள்ள நந்தியும் 'காடவ' என்ற விருதுப் பெயரும் உள்ளன. மறுபுறம் வட்டத்திற்குள் பிறை உருவம் காணப்படுகிறது.

## 'வபு' வெள்ளிக்காசு :

கரூரில் 'வபு' என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டும், கீழே இடப்புறம் திரும்பி நிற்கும் காளை பொறிக்கப்பட்டும் பல்லவரது வெள்ளிக் காசொன்று கிடைத்துள்ளது இதன் மறுபுறம் சங்கும் குத்து விளக்கும் உள்ளன. இவ்வடிவிலான செப்புக்காசு ஒன்று திருக்கோவிலூரிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளது. இதனை நந்திவர்மன் வெளியிட்டிருக்கலாம் என கருதப்படுகின்றது.

## கொடி பொறித்த காசு :

திருக்கோயிலூரில் முன்புறம் பல்லவரது காளையும் இதன் மேல் புறத்தில் திருவத்சம், சங்கம், பிறை, ஆகிய மங்கலச் சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பின்புறம் தாமரைப்பூவின் நடுவிலிருந்து செங்குத்தாக நடப்பட்டகொடிக்கம்பமும் அதன் உச்சியில் கொடிபறக்கும் நிலையில் உள்ளது. இதுவும் பல்லவருடையதாகலாம்▼

காஞ்சிபுரம் அகழாய்வில் காசுகள் அடிக்கப்பயன்படும் காளை உருவம் பொறிக்கப்பட்ட அச்சு ஒன்று கண்டுபிடிக்கபட்டது.

திருக்கோவலூரில் இரண்டு வகையான காளை உருவ செப்பு முத்திரைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இரண்டிலும் காளையின் மேல் பிறை உள்ளது. இது இராச முத்திரை ஆகலாம் இதுகாறும் கூறிப்வற்றான் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டை மண்டலத்தை ஆண்டு வந்த பல்லவர்கள் பலவிதமான வெள்ளிக்காசுகளையும், அதிக அளவில் செப்பு நாணயங்களையும் வெளியிட்டுள்ளமை புலனாகும். இவற்றில் இவர்கள் தமது அரசு சின்னத்தையும் விருதுப் பெயர்களையும் பொறித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

---

▼ அளக்குடி ஆறுமுக சீதாராமன் , பல்லவர் காலக் காசுகளும் முத்திரைகளும், ஆவணம், இதழ் 6. 1995. பக் 53.

## உ. சோழர் நாணயங்கள்

**சங்ககாலம்:**

சங்க காலப் பாண்டியரைப் போன்று, சங்க காலச் சோழர்கள் மிகுதியான நாணயங்களை வெளியிட்டதாகத் தெரியவில்லை. இவர்கள் மிகக்குறைந்த அளவிலான நாணயங்களையே வெளியிட்டனர். இவை அனைத்தும் செப்பு நாணயங்களே. பூம்புகார் அகழாய்வில் இந்தியத் தொல்லியல் துறையினர் சங்கச் சோழரின் சதுர வடிவிலான செப்புக் காசு ஒன்றைக் கண்டெடுத்தனர். அதில் ஒரு பக்கம் யானையும் மறுபக்கம் வாயைப் பிளந்து கொண்டு, வாலை உயர்த்தி நிற்கும் புலியின் உருவங்களும் உள்ளன. இவர்களது செப்பு நாணயம் ஒன்றின் முன்புறம் குடை, யானை, குதிரை ஆகிய சின்னங்களும், பின்புறம் புலியின் சின்னமும் பொறிக்கப்பட்டுள்ளன முட்டை வடிவிலான செப்பு நாணயம் ஒன்றும் நமக்குக் கிடைத்துள்ளது. இதில் முன்புறம் யானையும் அதன் அருகில் குதிரையும் உள்ளன நாணயத்தின் பின்புறம் புலி உருவம் நின்ற நிலையில் உள்ளது.

சங்கச் சோழரது நாணயங்கள் சிலவற்றில் தேர், குதிரைகள் பூட்டப்பட்ட தேர், யானை, வேலியிட்ட மரம், குடை, வேல், விலங்கு, மரம் முதலான சின்னங்கள் முன்புறம் உள்ளன. பின்புறம் புலி காணப்படும். சில நாணயங்களில் புலியுடன் சூரியன் சின்னமும் உள்ளன.

**காலம் :**

சங்ககாலச் சோழர் நாணயங்களில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டவை இதுகாறும் கிடைக்கவில்லை. எனவே இவற்றின் காலத்தைத் துல்லியமாகக் கணிக்க இயலவில்லை. பிற பகுதிகளில் காணப்படும் நாணயங்களில் பொறிக்கப்பட்டிருக்கும் சின்னங்களையும், சோழர் கால நாணயங்களில் உள்ள

சின்னங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால், சோழர் கால நாணயங்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிற்கும் கி.மு. முதல் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தியது என ஊகிக்கலாம். ஒரு சில காசுகள் கி.பி. முதல் நூற்றாண்டிலும் அல்லது முற்பகுதியைச் சேர்ந்ததாகவும் இருக்கலாம் எனக் கருதஇடமுண்டு

## பிற்காலச் சோழர் காலம் :

விசயாலயன் தொடங்கிவைத்த பிற்காலச் சோழர் காலத்திய வேந்தர், பல விதமான நாணயங்களை தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களில் வெளியிட்டனர். இவர்கள் காலத்திய காசுகள் பற்றிக் கல்வெட்டுகளில் பல குறிப்புகள் உள்ளன. தமிழ்நாட்டின் பலவிடங்களிலும் சோழர் காசுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. குறிப்பாக அதிலும் சிறப்பாக இராசராசப் பெருமன்னனின் காசுகள் கிடைக்காத இடமே தமிழ்நாட்டில் இல்லை எனலாம்.

கல்வெட்டுகளில் 'மதுராந்தகன் மாடை' 'இராஜராஜன் மாடை' 'இராஜேந்திரன் மாடை' முதலான காசுகளைப் பற்றியும் கழஞ்சு, பொன் பற்றியும் நிறைய குறிப்புகள் காணப்படுகின்றன. மாடை என்பது இரண்டு காசுகளுக்குச் சமமானது.

நமக்கு இதுகாறும் கிடைத்துள்ள சோழர் காசுகளுள் மிகவும் பழமையானது உத்தம சோழனின் காசுகளேயாகும். இவை தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய மூன்றிலும் உள்ளன. இவ்வேந்தனது காசுகள் மூன்று வகையினவாகக்கிடைத்துள்ளன.

அவற்றின் முன்புறம் புலி, இணைக்கயல், வில் ஆகியனவும் பின்புறம் நாகரியில் 'உத்தம சோழன் ' என எழுதப்பட்டவை முதல் வகையினதாகும்.

இரண்டாம் வகை நாணயங்களின் முன் புறத்திலும் மறு புறத்திலும் புலியும் மீனும் பொறிக்கப்பட்டுள்ளன. காசின் ஓரத்தில் 'மதுராந்தகன்' என்று தமிழிலும் கிரந்தத்திலும் கலந்து எழுதப்பட்டுள்ளது.

மூன்றாவது வகை நாணயங்களில் முன் புறத்தில் புலியும் ஒரு மீனும் பொறிக்கப்பட்டு, ஓரத்தில் 'உத்தம சோழன்' என்று தமிழில் பொறிக்கப்பட்டுள்ளது.

முதன் முதலில் தங்க நாணயத்தை வெளியிட்ட பெருமை உத்தம சோழனையேசாரும். வெள்ளி நாணயத்தையும் இவரே முதலில் வெளியிட்டவர் எனலாம்.

## முதலாம் இராசராசனின் காசு :

தமிழகத்தின் மூலை முடுக்கெல்லாம் பெருமளவில் கிடைக்கின்ற நாணயம் இராசராசப் பெருமன்னனுடையதே. கரூரில் மட்டும் இராசராசனது செப்புக் காசுகள் 30000த்திற்கு மேல் கிடைந்துள்ளன.

இராசராசனது காசுகளை நாம் இருவகையாகப் பகுக்கலாம். முன் பக்கமும் பின் பக்கமும் புலி, இரட்டை மீன், வில் ஆகிய மூன்று சின்னங்களும் பொறிக்கப்பட்டு ஸ்ரீ ராஜராஜ சோழ' என நாகரி எழுத்தில் பொறிக்கப்பட்டிருப்பவை முதல் வகையினவாகும்.

இரண்டாவது வகைக் காசின் இரு புறங்களிலும் ஈழ மனிதன் இடம் பெறுகிறான். இதில் முன்புறம் அம்மனிதன் நின்ற நிலையிலும் மறுபுறம் அமர்ந்த நிலையிலும் காட்டப்பட்டுள்ளான். அமர்ந்த ஈழமனிதனது கையின் கீழ் நாகரி எழுத்தில், 'ஸ்ரீராஜராஜஸ்ரீ' என்று பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. கேரளம், ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம், ஸ்ரீலங்கா ஆகிய பகுதிகளிலும் இராஜராஜன் காசுகள்

அதிக எண்ணிக்கையில் கிடைத்துள்ளன. இவன் தனது ஈழ வெற்றியின் நினைவாக நாணயங்கள் வெளியிட்டுள்ளான். அவை ஈழக் காசுகள் என அழைக்கப் பெறுகின்றன.

## முதலாம் இராசேந்திரனின் காசுகள் :

மாபெரும் வெற்றி வீரனாகத் திகழ்ந்த முதலாம் இராசராசனின் மகனான முதலாம் இராசேந்திர சோழன் மா மன்ன னாகவும் மாபெரும் வெற்றி வீரனாகவும் திகழ்ந்தான். இவ்வேந்தன் தனது விருதுப் பெயர்களில் பல நாணயங்களை வெளியிட்டுள்ளான். அவை பல வகைப்பட்டவை. அவற்றுள் குறிப்பிடத்தக்க மூன்று வகை நாணயங்களைப் பற்றி மட்டும் இங்கே காண்போம்.

1. இரு பக்கங்களிலும் புலி, இணைக்கயல், வில் ஆகிய மூன்று உருவங்கள் வரிசையாக பொறிக்கப்பட்டு, அவற்றின் கீழ் 'கங்கை கொண்ட சோழன்' என்று நாகரியில் பொறிக்கப்பட்டுள்ளது.

2. இருபுறமும் புலி, இணைக்கயல், வில் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றின் கீழ் 'ஸ்ரீ ராஜேந்திர சோழன்' என்று நாகரி எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

3. முன்புறமும் பின்புறமும் மூவேந்தர் சின்னங்களும் காசின் நடுவில் பொறிக்கப்பட்டுள்ளன. ஓரத்தில் இச்சின்னங்களைச் சுற்றிலும் 'கங்கை கொண்ட சோழன்' என்று கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

ஆந்திரப் பிரதேசத்தின் தவளேசுவரத்தில் இவ்வேந்தனது காசுகள் புதையலாகக்கிடைத்துள்ளன. இவை சற்று தேய்ந்துள்ளன. அண்மையில் இராசேந்திரனது தங்கக் காசுகள் சில கண்டிபிடிக்கப்பட்டுள்ளன. இவை அளவில் சிறியனவாகும்.

## இராசாதி ராசனின் காசுகள் :

முதலாம் இராசேந்திரனின் மகனான இராசாதிராசனும் சிலவகையான நாணயங்களை வெளியிட்டுள்ளான். அவற்றுள் 'மலை நாடு கொண்டான் எனத் தமிழில் பெயர் பொறிக்கப்பட்டுள்ள காசுகள் குறிப்பிடத்தக்கவை. அடுத்து மன்னன் குதிரை மீது சவாரி செய்யும் நிலையில் பொறிக்கப்பட்ட காசும் இவ்வேந்தனுடையதே ஆகும்.

புல்லாங்குழல் வாசிக்கும் நிலையில் கண்ணனின் உருவம் பொறிக்கப்பட்ட நாணயங்களும் இவ்வேந்தனுடைய தென்றே ஆய்வாளர் கருதுகின்றனர். சில காசுகளில் "ரா' என்னும் எழுத்து மட்டுமே உள்ளது.

## முதலாம் குலோத்துங்கனின் காசுகள் :

சோழ சாளுக்கிய மரபைத் தோற்றுவித்தவன் குலோத்துங்க சோழன். இவனே கலிங்கத்தின் மீதுப் படையெடுத்தவன். சுங்கம் தவிர்த்த சோழன் என்று புகழப் படுபவன். இவ்வேந்தனும் சில காசுகளை வெளியிட்டுள்ளான். 'சுங்' என்று பெயர் பொறித்தக காசுகளும் இவ்வேந்தனுடையதாகவே கொள்ளலாம். ஏனெனில் 'சுங்கம் தவிர்த்தவன்' என்பதன் சுருக்கமே 'சுங்' ஆகும். ஸ்ரீ குலோத்துங்கன் ஸ்ரீ என்னும் நாணயங்களும் இவ்வேந்தனுடையதேயாகும். இதில் தமிழ், நாகரி ஆகிய இரு எழுத்துக்களிலும் கலந்து எழுதப்பட்டுள்ளன.

## முடிவுரை:

சோழ வேந்தர்களது தங்க நாணயங்கள் குறைந்த அளவில் தான் கிடைத்துள்ளன. இவையாவும் சுத்தமான தங்கத்தில் செய்யப்படாமல் கலப்படமான தங்கத்தில் அடிக்கப்பட்டுள்ளன சில தங்க நாணயங்களின் முன்புறம் மீனும், அமர்ந்த நிலையில் புலியும்,

மறுபுறம் 'சுந்தர சோழர்' என்ற தமிழ் வாசகமும் பொறிக்கப்பட்டுள்ளன. தங்கக்காசுகள் சில அளவில் சிறிதாகவும், ஆறு தானியமணி எடை கொண்டதாகவும் உள்ளன. இவற்றின் முன்புறம் நடுவில் ஒரு குடையும் இரு புறமும் அக்குடைக்கு எதிரே வெண் சாமரங்கள் இரண்டும், குடைக்கிடையில் குத்து விளக்கு, வில், புலி இணைக்கயல், ஒரு கோடு ஆகிய சின்னங்களும் வரிசையாகப் பொறிக்கப்பட்டுள்ளன. மறுபுறம் 'யுத்த மல்லர்' எனும் வாசகம் நாகரியில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்காசு முதலாம் இராசேந்திரனுடையதாகக் கருதப்படுகிறது. 'ஸ்ரீ லங்கேஸ்வரர்' அல்லது 'ஸ்ரீ லங்க வீரர்' என்னும் வாசகம் பொறித்த நாணயங்களும் கிடைந்துள்ளன. இவை முதலாம் இராசராசனுடையது ஆகலாம்.

## விசயநகரத்தார் நாணயங்கள் :

கி.பி. 1336 ஆம் ஆண்டு தோன்றிய விசயநகரப் பேரரசு ஒரு இந்துப் பேரரசு ஆகும். தென்னிந்தியாவில் முசுலிம் ஆதிக்கத்தைப் பரவ விடாமல் தடுப்பதே இதன் நோக்கமாகும். இவர்களது ஆட்சிக்காலம் இந்து சமய வரலாற்றில் மட்டுமின்றித் தென்னிந்திய நாணய வரலாற்றலும் புதிய தோர் சகாப்தத்தினை உருவாக்கியது எனலாம். இப்பேரரசு கி.பி. 1565 முடிய மகோன்னத நிலையைப் பெற்றிருந்து. இக்காலக் கட்டத்தில், இவர்கள் அதிக அளவில் தங்க நாணயங்களை வெளியிட்டனர். இவர்கள் வைணவ சமயத்தைச் சார்ந்திருந்ததால், இவர்களது நாணயங்களில் வெங்கடேசர், லட்சுமி நாராயணர், ராமர், லட்சுமி நரசிம்மர் முதலான குல தெய்வங்களும், கருடன், சங்கு, சக்கரம், வராஉறம் முதலான மங்கல சின்னங்களும் பொறிக்கப்பட்டுள்ளன. இவர்கள் வெள்ளி நாணயங்களையும் ஓரளவிற்கு வெளியிட்டனர்

விசய நகர வேந்தரது தங்க நாணயங்கள் பருத்தும் அளவில் சிறியதாகவும் உள்ளன. இவற்றின் முன்புறம் பெரும்பாலும் இந்துக் கடவுளரின் உருவங்களே இடம் பெற்றுள்ளன. இவற்றின் பின்புறம் வேந்தரது பெயர்கள் கன்னடத்திலோ, நாகரியிலோ பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றைப் பின்பற்றியே ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரும், பிரதேச அரசர்களும் பகோடா என்னும் நாணயத்தினை வெளியிட்டுள்ளனர்.

விசய நகர வேந்தரது நாணயங்களில் கன்னடம், நாகரி, தெலுங்கு எழுத்துக்களையே பயன்படுத்தினர். மும்மை நாணயத்திட்டகளின் கீழ் வெளியிடப்பட்ட காசுகளில் விசய நகர வேந்தர்கள் தங்களது பெயர்களைக் கன்னடம், நந்தி நாகரி, தெலுங்கு ஆகிய மொழிகளில் பொறித்துள்ளனர்.

மூன்றாம் வேங்கடனுக்குப் பின் ஆட்சிக்கு வந்த மூன்றாம் சீரங்களின் செப்புக் காசு ஒன்றின் முன்புறம் அனுமாற் நின்ற நிலையில் உள்ளார். பின்புறம்

'சீரங்கன்' என்று தமிழில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்காசு 2.4. கிராம் எடையுள்ளது*. இந்நாணயத்தை வெளியிட்ட சீரங்கள் விசயநகராப் பேரரசின் நான்காவது மரபான அரவீட்டின் கடைசி வேந்தன் ஆவான்.

சங்கம மரபின் மன்னரும் விசய நகர அரசைத் தோற்றுவித்தவருமான உறரிஹரது (கி.பி. 1336-1356) நாணயங்களில் ஆஞ்சநேயரின் சின்னமும், கருடனின சின்னமும் பொறிககப்படுள்ளன. உறரிஹரிரன் தேவராயர் இருவராலும் வெளியிடப் பெற்ற தங்கக் காசுகளில் உமா மகேசுவரர் உருவம் பொறிக்கபபட்டுள்ளது*.

---

* (அளக்குடி ஆறுமுக சீதாராமன் 'விஜய நகர மன்னின தமிழ்ககாசு தினமணி 19 2,91.)

புக்கர், தேவராயர் காலத்திய நாணயங்கள், திருமால், பிராட்டியர்களுடன் (உமா மகேஸ்வரர்)காட்சி தருகிறார். அரிகரருக்குப் பின் கிருட்டிண தேவராயர் (கி.பி. 1509- 1529) தமது நாணயங்களில் மீண்டும் கருடனின் சின்னத்தைப் பொறித்தார்.

இரண்டாம் அரிகரர் (கி.பி. 1377 -1404, பிரதாப உறரிஹரர்) காலத்திய தங்க நாணயங்களில் உமா மகேஸ்வரர், லட்சுமி நரசிம்மர், லட்சுமி நாராயணர் ஆகிய தெய்வத் திருவுருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. செப்பு நாணயங்களில் காளை உருவம் உள்ளன.

தேவராயரது (கி.பி. 1422 1466) தங்க நாணயங்களில் உமா மகேஸ்வரர் திருவுருவங்கள் மட்டும் முத்திரையிடப்பட்டுள்ளன. செப்பு நாணயங்களில் யானையின் உருவம் சேர்க்கப்பட்டுள்ளது. இவரது பின்னோரும் இதே சின்னங்களைத் தான் தமது நாணயங்களில் பொறித்தனர்.

அச்சுதராயர் (கி.பி. 1539 -1542) காசுகளில் இரு தலைகளைக் கொண்ட கண்ட பேருண்டா பறவை தனது அலகுகளால் யானைகளைக் கொத்தி நிற்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளது. சில நாணயங்களில் பன்றி, கருடன், நடனமாடும் கண்ணன் உருவங்களும் பொறிக்கப்பட்டுள்ளன.

சதாசிவராயரது (கி.பி. 1542- 1570) ஸ்ரீ காசுகளில் லட்சுமி நாராயணர் திருஉருவத்துடன், கருடன் சின்னமும் உள்ளது. திருமலைராயர் (கி.பி. 1570 -1573 ) தமது காசுகளில் விஷ்ணுவின் அம்சங்களைச் சித்திரிக்கும் சங்கு, சக்கரம், கருடன், வராகம் (பன்றி) உருவங்களையும் இராமபிரானின் திருவுருவத்தையும் பொறித்துள்ளார்.

விசய நகர வேந்தர்கள் வைணவ சமய ஆதரவாளர்களாகத் திகழ்ந்ததால் அவர்கள் பிற்காலத்தில் வெளியிட்ட நாணயங்களில் வேங்கடேஸ்வரரின் திரு உருவத்தையே பொறித்தனர். வட்டார நாணயங்களில் விஷ்ணுவின் அவதாரத் திருவுருவங்களும் வெளியிடப் பெற்றன. ஒரு சில காசுகளில் மட்டுமே சைவ சமயச் சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. வட்டார நாணயங்கள் சிலவற்றில் மயில், மான், யானை, சிங்கம், காளை, புலி, முதலான உருவங்கள் உள்ளன.

விசய நகரத்தாரின் ஆட்சிக் காலத்தில் 'ராம டங்கா' எனப்பட்ட தங்க நாணயங்கள் பேரளவில் வெளியிடப்பட்டன. இவற்றின் ஒரு பக்கத்தில் இராமரும் சீதையும் அமர்ந்துள்ளனர். மறு பக்கத்தில் அனுமன் நிற்கிறார் அனுமனுக்கு அருகில் நாகரியில் மன்னன் பெயர் உள்ளது.

விசய நகர வேந்தர் தொடக்க காலத்திய நாணயங்களில் பழங்காலக் கன்னட எழுத்துககளையே பயன்படுத்தினர். இதன் காரணம் யாதெனில் இவர்கள் ஒய்சாளப் பாணியையும், மேலைச் சாளுக்கியப் பாணியையும் பினபற்றியதால் எனலாம். சிக்கராயர் (கி.பி. 1614-1615) மட்டுமே தனது காளைச் சின்னம் கொண்ட காசுகளில் தெலுங்கு வாசகத்தை மட்டும் பொறித்துள்ளார்.

இதுகாறும் 3500 க்குமேற்பட்ட விசயநகரத்தார் நாணயங்கள் கிடைத்துள்ளன. இதுவரை ஏழத்தாழ 2850 க்கு நாணயங்களுக்குப் பட்டியல் போடப்பட்டுள்ளன. இவற்றுள் கிருட்டிண தேவராயரது உருவம் பொறிக்கப்பட்ட தங்கக் காசும் ஒரு பக்கம் விஷ்ணுவின் உருவம் பொறிக்கப்பட்ட இரண்டாம் சிரங்கராயரின் நாணயமும் குறிப்பிடதக்கனவாகும்.

விசய நகரப் பேரரசர்களின் சிற்றரசர்களான மதுரை. தஞ்சை, செஞ்சி நாயக்கர்களும் பல விதமான காசுகளை வெளியிட்டனர். இவர்களது காசுகளில் நாகரி, தெலுங்கு எழுத்துக்களே பெரும்பாலும் காணப்படுகின்றன. மதுரை நாயக்க வேந்தனான விசுவநாத நாயக்கரின் காசில் 'விஸ்வநாதன்' என்றும், மீனாட்சி அரசியின் (1732-36) காசில் 'மீனாட்சி' என்றும் தமிழில் பொறித்திருப்பது ஒரு புதுமையாகும். இதனைப் போன்று தஞ்சை நாயக்க வேந்தனான விசய ரகுநாதனின் நாணயம் ஒன்றிலும், 'விசய ரகு நாதன்' என்றே மன்னனின் பெயர் தமிழில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்காசின் முன்புறம் திருமகள் (லட்சுமி) திருவுருவம் இடம் பெற்றுள்ளது.



# 7. கல்வெட்டியல் (Epigraphy)

## அ. கல்வெட்டின் முக்கியத்துவம் :

### முன்னுரை :

கல்லிலே வெட்டப்படும் எழுத்து கல்வெட்டு ஆகும். இதனை வெட்டழுத்து (Inscription) எனவும் அழைக்கலாம். நம் நாட்டில் தாள்கள் (பேப்பர்) கிடைக்காத முற்காலத்தில் அரசனும், அதிகாரிளும் பிறரும் ஆவணங்களைக் கற்களிலும், கோயிற் சுவர்களிலும் எழுதி வைத்தனர். குகைகளிலும் குன்றுகளிலும் கல்தூண்களிலும், கற்பாறைகளிலும், கற்களிலும் இன்றும் அவை காணப்படுகின்றன. கல்வெட்டுக்கள் இன்று வரலாற்றை உருவாக்க உதவும் அடிப்படைச் சான்றுகளாக விளங்குகின்றன.

## ஆ. எழுத்தின் தோற்றம் :

பண்டைய மனிதன் தனது கருத்துக்களைத் தெரிவிக்கவும், மனித அறிவில் தோன்றிய வளர்ச்சியைக் காட்டவும் பயன்படுத்திய ஓர் உருவ அமைப்பே எழுத்தாகும். தொடக்ககாலத்தில் எழுத்துக்கள் சித்திரங்களாகவும் கருத்துக்களை உள்ளடக்கியதாகவும் ஒலியாகவும் உருவாக்கப்பட்டன. தொல் பழங்கால மனிதன் தனது உணர்வைப் பிறர்கருக் காட்டச் சித்திரங்களை (ஓவியங்களை) குகைகளிலும் மரப்பொந்துகளிலும் வரைந்தான். சித்திர எழுத்துக்கள் (Pictography) வளர்ச்சிபெற்றுக் கருத்தெழுத்துக்களாக (Ideograms) மலர்ந்தன. பின்னர், காலப்போக்கில் ஒலி எழுத்துக்களாக (Phonography) உருவெடுத்தன, சித்திர எழுத்துக்கள் கருத்தெழுத்துககள் ஆகிய நிலையிலிருந்து உண்டான வளர்ச்சியே ஒலி எழுத்து, ஒலி எழுத்து தோன்றிய பின்னரே நிலையான எழுத்துக்கள் எழுதப்பட்டன. நன்னூல் எனும் தமிழரின் இலக்கண நூலும் ஒலியே எழுத்து என்றும் அது முதலெழுத்து சார்பெழுத்து என இருவகைப்படும் என்றும் எழுத்தின் தோற்றம் பற்றியும்

விளக்குகிறது இதனை

"மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்து அது முதல்சார் பெனவிரு வகைத்தே"

எனும் நூற்பாவால் அறியலாம்.

இந்தியாவில் கிடைத்துள்ள எழுத்துக்களுள் மிகத் தொண்மை மிக்கவை மொகஞ்சதாரோ. ஆரப்பா அகழ்வில் கிடைத்தவைகளே ஆகும். இவை ஏறத்தாழ கி.மு. 3000 ஆண்டுகட்கு முற்பட்டவை, ஆரப்பா எழுத்துகளை சித்திர எழுத்துக்கள் என அழைக்கப்படுகின்றன. இவற்றுள் சில ஒலி எழுத்துக்களும் கலந்துள்ளன. எனவே சிந்துவெளி எழுத்துக்களை ஒருவகையான சித்திர ஒலி எழுத்துக்கள் எனக் கூறுவதே பொருத்தமாகும். வட இந்தியா முழுமையிலும் அசோகப் பேரரசன் காலத்திலிருந்து பிராமி, கரோஷ்டி எழுத்துக்கள் புழக்கத்தில் இருந்தன. சில பகுதிகளில் சமஸ்கிருதம், பிராகிருதம் ஆகிய மொழிகளும் எழுதுவதற்குப் பயன்பட்டன.

தமிழகத்தின் வழக்கில் இருந்த பண்டைய தமிழ் எழுத்துக்களைப் பிராகிருத மொழியினர் தமிழி, என அழைத்தனர். கி.மு. முதல் நூற்றாண்டில் உருவான 'சமவயங்க சுத்த' என்னும் சமண நூல் 18 வகையான எழுத்துக்களைக் குறிக்கின்றது. அவற்றுள் இரண்டு தமிழி, பம்மி என்பன. கி.பி 5,6 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய 'லலித விஸ்தரம்' என்னும் நூலோ 64 வகை எழுத்துக்களைப் பேசுகின்றன. மேற்கூறிய தமிழியும் பம்மியும் முறையே இந்நூலில் திராவிடி என்றும் பிரம்மி என்றும் வழங்கப்படுகின்றன. எனவே பிராமி எழுத்து வழக்கில் இருந்தமை தெளிவு. அடுத்து தமிழ் நாட்டு பிராமியிலிருந்துதான், சிலமாற்றங்குளுடன் வடஇந்திய பிராமி தோன்றியிருத்தல் வேண்டும் தமிழ் மொழியை எழுத தமிழி எழுத்து மட்டுமின்றி வட்டெழுத்தும் பயன்படுத்தபட்டது. கிரந்த

எழுத்தும் தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களில் பயிலப்பட்டுள்ளன. தமிழகத்தில் சமஸ்கிருதத்தை எழுதத் தொன்று தொட்டு வழங்கிய எழுத்தே கிரந்தம் ஆகும். ஆனால் வட இந்தியாவில் சமஸ்கிருதத்தை எழுதப் பயன்படுத்தப்பட்ட எழுத்து நாகரி அல்லது **தேவநாகரி** என்றழைக்கப்பட்டது. நாகரி வடஇந்தியாவில் பெருவழக்காக இருந்த போதிலும், தமிழகக் கலவெட்டுக்களிலும் இது இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். எடுத்துக்காட்டாக மாமல்லபுரத்திற்கு அருகில் உள்ள சாளுவன் குப்பம் குகைக்கோயில் கல்வெட்டிலும், வேணாட்டைஆண்ட ஆய்மன்னன் கருநந்தடக்கன் செப்பேட்டிலும் நாகரி பயிலப்படுவதைச் சுட்டலாம். சோழப் பெருமன்னர்கள் வெளியிட்டுள்ள காசுகளிலும் இதனைப்பயன்படுத்தியுள்ளனர்.

தெலுங்கு, கன்னட, மராட்டிய மொழிகளில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளும் தமிழ்நாட்டில் உள்ளன. மராட்டிய மொழிக்கல்வெட்டுகள் **மோடி** என்னும் எழுத்தில் எழுதப்பெற்றுள்ளன. தஞ்சைப்பெரிய கோயிலில் மோடிக்கல் வெட்டுகளும் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது,

வெட்டெழுத்தில் கல்வெட்டுகள், செப்புப் பட்டயங்கள், என்னும் இரு பிரிவுகள் உள்ளன. பழங்காலத்தில் ஆவணங்கள் ஓலைகளில் எழுதப்பட்டன. இவை காலப்போக்கில் அழிந்து விடுவதால் கல்லிலும் செம்பிலும் எழுதி வைத்தனர். தமிழ்நாட்டில் வெள்ளி ஏட்டிலும் பொன் ஏட்டிலும் எழுதப்பட்ட சாசனங்களும் கிடைத்துள்ளன.

இந்தியாவிலேயே தமிழ்நாட்டில் தான் அதிகமான கல்வெட்டுகள் காணப்படுகின்றன. கல்வெட்டுகளின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் ஆய்ந்து பார்க்குங்கால், இங்கு

பன்னெடுங்காலத்திற்கு முன்பே நடுகல் அல்லது வீரக்கல் எடுக்கப் பெற்றதனை அறிகிறோம். போரில் பெரு வீரங்காட்டிப் பொரிட்டு மாண்ட வீரர்களின் நினைவாக எடுக்கப் பெற்றவை அவை

கல்வெட்டுகளைக் கொண்டு ஒரு நாட்டின் வரலாற்றை நாம் உருவாக்க முடியும். கல்வெட்டை வெளியிட்ட மன்னன், அவனது ஆட்சியாண்டு, விருதுப் பெயர்கள், வெற்றிகள், ஆட்சிமுறை, அரசியல் அதிகாரிகள், அவனது சம கால அரசர்கள், சிற்றரசர்கள், அவன் அளித்த தானங்கள், கட்டிய கோயில்கள், சார்ந்திருந்த சமயம் முதலான இன்னோரன்ன செய்திகளை அறிந்து கொள்ள முடிகிறது. திருக்கோயில்கள் எப்போது? யாரால்? கட்டப்பட்டன என்ற செய்தியும் கல்வெட்டால் அறியப்படுகின்றது.

ஒரு நாட்டின் சமுக பொருளாதார, சமய வாழ்க்கையை அறிந்து கொள்ள கல்வெட்டுக்கள் துணைபுரிகின்றன.

இலக்கியங்களில் கூறப்பட்ட செய்திகளை உறுதிப்படுத்த கல்வெட்டுக்கள் உதவுகின்றன. எடுத்துக்காட்டாக சங்க இலக்கியங்களில் சங்க காலச் சேர, சோழ, பாண்டிய வேந்தர்களைப் பற்றிக் காண்கிறோம். இந்த அரசர்களைப் பற்றிப் பல கல்வெட்டுகளும் கூறுகின்றன. கரூர் மாவட்டம், கரூருக்கு அண்மையில் உள்ள புகழூர்க் கல்வெட்டு மூன்று சேர மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. மாங்குளம் கல்வெட்டு பாண்டிய நெடுஞ்செழியனைப்பற்றிக் குறிப்பிடுகிறது.

கல்வெட்டின் மூலம் ஒரு நாட்டின் பொருளாதார நிலையை அறிய முடியம். எடுத்துக்காட்டாகச் சில கல்வெட்டுகளில் வணிகம், வணிகர்கள், வணிகக் குழுக்கள், அவர்கள் கடல் கடந்த நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்தமை, அவர்கள் கோயிலுக்கு வழங்கிய தானங்கள் ஆகியவை கூறப்படுள்ளன. தமிழ்நாட்டில்

நானா தேசிகர், அஞ்சு வண்ணத்தார், திசையாயிரத்து ஐந்நூற்றுவர், நாட்டுக் கோட்டை நகரத்தார் முதலான வணிகப் பிரிவினர் இருந்தமை கல்வெட்டுக்களால் புலனாகின்றன.

தமிழ்நாட்டில் நடைபெற்ற விவசாயம், தொழில்கள் பற்றி அறியவும் கல்வெட்டுகள் துணைபுரிகின்றன. அன்று பயிர் செய்யப்பட்ட தானியங்கள், ஆறுகள், கால்வாய்கள்,வெள்ளம், பஞ்சம், ஆகியன பற்றியும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. சித்திர மேழிப்பெரிய நாட்டார் எனும் விவசாயிகளின் அமைப்பு பற்றியும் அவர்களது செயல்பாடுகள் குறித்தும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

கல்வெட்டுகளைக் கொண்டு சமுதாய நிலையை முழுமையாக அறிய முடிகிறது. அரசர், அமைச்சர், அதிகாரிகள், வணிகர், படைவீரர், விவசாயிகள், பிராமணர், பல்வகைப்பட்ட தொழில் புரிவோர், விவசாயிகள், ஆகியோர் சமுதாயத்தில் பெற்றிருந்த நிலை பற்றியும் அறிகிறோம்.

பிராமணர்களுக்கு வழங்கப்பட்ட சதுர்வேதி மங்கலங்கள், திருக்கோயில்களுக்கு வழங்கப்பட்ட பள்ளிச் சந்தம், தேவதானம் திருவிடையாட்டம் முதலான பலவகையான நிலதானம் பற்றியும் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

ஆட்சிமுறைபற்றியும் கல்வெட்டுகள் விரிவாகக் கூறுகின்றன. எடுத்துக்காட்டாக கிராம ஆட்சி முறை பற்றிய பல விபரங்களைக் கூறுகின்ற முதலாம் பராந்தக சோழனின் உத்தர மேரூர் கல்வெட்டு, மாறஞ்சடையனது மானூர்க் கல்வெட்டு, வரகுண மகாராசனின் திருச்செந்தூர்க் கல்வெட்டு, (1228-29ஆம் ஆண்டினதான) சுசீந்திரம் கல்வெட்டு ஆகியவற்றைச் சுட்டலாம்.

திருக்கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள், கூத்து, பாடல், ஆடல், நிகழ்ச்சிகள், நாடகம், பொழுது போக்குகள் பற்றி அறிந்து கொள்ளக் கல்வெட்டுகள் துணைபுரிகின்றன. திருக்கோயில் நிர்வாகம் பற்றிய செய்திகளும் கல்வெட்டுகளில் கூறப்படுள்ளன.

அந்நியரின் படையெழுச்சி, அதனால் மக்கள் பட்ட துன்பங்கள், ஆகியவற்றைக் கல்வெட்டுகள் விரித்துப் பேசுகின்றன. எடுத்துக்காட்டாக மாலிக்காபூர், குஸ்ருகான் முதலான முஸ்லிம்களின் படையெழுச்சி பற்றிக்கூறப்பட்டுள்ளதனைச் சுட்டலாம்.

தமிழரின் வீர வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுபவை கல்வெட்டுகள். நடுகற்கள் (Hero Stones) தனிப்பட்ட வீரனின் வெற்றிச் சின்னம் ஆகும். இவை வீரக்கற்கள், நினைவுககற்கள் பட்டான் கல்லு , மாசதிக்கல், மாஸ்திக்கல் எனவும் அழைக்கப்பட்டன. பெண்களின் நினைவாக எடுக்கப்பட்டகல் மாசதிக்கல் ஆகும். இதனையே வீரமாத்திக்கல் எனவும் வழங்குவர்.

கல்வெட்டுகளைக் கொண்டு நாட்டில் வழக்கில் இருந்த நாணயங்கள், நிறுத்தல், முகத்தல் அளவைகள், பொருட்களின் விலைகள் முதலான பல செய்திகளை அறிகிறோம்.

ஒரு நாட்டின் எழுத்து வளர்ச்சி, மொழி, மொழி நடை, இலக்கியங்கள், பள்ளிகள், பல்கலைக் கழகங்கள், கல்வி நிலையங்கள் ஆகியவற்றைப் பற்றிக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. குறிப்பாக திரிபுவனம், திருமுக்கூடல், எண்ணாயிரம் முதலான பண்டைக்காலப் பல்கலைக்கழகங்கள் பற்றி அறிகிறோம்.

மன்னனின் படையெழுச்சி, மக்கள் செலுத்திய வரிகள், குற்றங்கள் தண்டனைகள் ஆகியன பற்றியும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. எடுத்துக்காட்டாக முதலாம் இராசேந்திரன் கங்கை,

கடார படையெழுச்சிகள், முதலாம் இராசராசனின் ஈழப் படையெழுச்சி, குலோத்துங்கனின் கலிங்கப் படையெழுச்சி. கைக்கோலர் (நெசவாளர்) மீது விதிக்கப்பட்ட வரிகள் ஆகியவற்றைப்பற்றியும் அறிகிறோம். எனவே கல்வெட்டுகள் ஒரு நாட்டின் வரலாற்றை அறிய உதவும் முக்கிய சானறாகவும், ஆதாரமாகவும் விளங்குகின்றன. தமிழர்களுக்கு வரலாற்று உணர்வு இருந்தது என்பதனைக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. கல்வெட்டுகள் ஆவணங்களே. கல்வெட்டுகள் இல்லையேல் நம்நாட்டு வரலாறு இத்துணை அளவு ஒளி பெற்றிருக்காது. எனவே இவை மக்கள் வாழ்வைப் பிரதிபலிக்கும் காலக் கண்ணாடிகள் ஆகும். கல்வெட்டுகளைப் பாதுகாப்பது நம் கடமை ஆகும்.

## இ. பிராமிக்கல்வெட்டுகள் :

பிராமி என்பது பண்டைய இந்திய எழுத்து முறைகளுள் ஒன்று கி.பி மூன்றாம் நூற்றாண்டளவில் இது இந்தியா முழுவதிலும் பரவலாகப்பின்பற்றப்பட்டதால், அசோகன் காலத்திற்கு முன்பே இது தோன்றியிருத்தல் வேண்டும் எனலாம். நம் பாரத்தில் மட்டுமின்றி சீலங்கா, தெனகிழக்கு ஆசிய நாடுகள் ஆகியவற்றிலும் பிராமி பரவியிருந்தது

### பெயர்க்காரணம் :

இது பிரமனால் படைக்கப்பட்டதலால் பிராமி எனப் பெயர் பெற்றதாகச் சிலர் கருதுவர். வேறு சிலர் ஆதிநாதர் எனும் சமண தீர்த்தங்கரர் தனது மகள் பிராமியின் பெயரால இதனைத் தோற்றுவித்தார் எனக் கூறுவர் சமண நூலான பகவதி சூத்திரம் பிராமிக்கு வணககும் கூறித்தொடங்குகிறது.

### தோற்றம் :

பிராமி எழுத்துகளின் தோற்றம் குறித்து அறிஞரிடையே ஒருமித்த கருத்து உருவாகவில்லை. கிரேக்கம், பினிசியா,

செமிட்டிக், சீனம், அசிரிய ஆப்பெழுத்து, போன்றவற்றிலிருந்து இவை தோன்றிய தென ஒருசாராரும், சிந்துவெளி எழுத்துக்களின்றும் தேவநாகரி எழுத்தினின்றும் இவை தோன்றின என்று மற்றொரு சாராரும் கருதுகின்றனர். பிராமி, தேவநாகரியின்றும் தோன்றியதென்பது பொருந்தாக்கூற்றாகும். ஏனெனில் தேவ நாகரி பிற்காத்தில் தோன்றியது.

தொடக்க காலத்தில் பிராமியும் கரோஷ்டியப் போன்று வலமிருந்து இடமாக எழுதப்பட்டது. ஏரன் காசுப் பொறிப்பு வலமிருந்து இடமாக எழுதப்பட்டுள்ளதும் குறிப்படத்தக்கது. கி.பி. 1837இல் ஜேம்ஸ் பிரின்செப் அவர்கள் பிராமி எழுத்துக்களுக்கு முதன் முதலாக ஒலி நிருணயம் செய்தார்.

முதலில் தொல்பொருள் துறையினர்க்கே பிராமி எழுத்துக்கள் என்னவென்று புரியவில்லை. எனவே இவற்றை 'இந்தியப்பாலி' எழுத்துக்கள் என்றே குறிப்பிட்டனர்.

1903ஆம் ஆண்டு வெங்கோபாராவ் அவர்கள் தமிழகத்தின் முதல் பிராமிக் கல்வெட்டை கீழவளவில் (மதுரை மாவட்டம்) கண்டுபிடித்தார். அடுத்த கல்வெட்டு கி.பி. 1906இல் மறுகால் தலையில் (திருநெல்வேலி மாவட்டம்) கண்டுபிடிக்கப் பட்டது, அரிக்கமேடு, கொடுமணல், காஞ்சிபுரம், உறையூர், கரூர், அலகரை முதலான இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளில் பானை ஓடுகளில் பிராமி எழுத்து பொறிக்கப்பட்ட பல காசுகளும் மோதிரங்களும் கிடைத்துள்ளன.

மத்திய தொல்லியல் துறையினர் அசோகன் கல்வெட்டுக்களை வட பிராமி எனவும் தமிழ்நாட்டு பிராமிக்கல்வெட்டுகளை தென் பிராமி என்றும் வேறுபடுத்திக் கூறினர். திரு K.V. ரமேஷ் அவர்கள் அசோகன் பிராமியை 'மௌரியன் பிராமி' (அல்லது) ArchaicBrahmi

என்றும் தமிழ் நாட்டில் திராவிட ஒலியுடன் திகழ்தந்தை தமிழ் பிராமி என்றும் அழைத்துள்ளார் K.V. Ramesh - " On the origin and Dissemination of the Brahmi Script")

தமிழ்நாட்டில் காணப்படும் கல்வெட்டுகளில் மிகவும் பழமையானவை பிராமிக் கல்வெட்டுகள் ஆகும் இதனைத் தமிழிக் கல்வெட்டுகள், தமிழ் பிராமிக் கல்வெட்டுகள், தாமிழிக் கல்வெட்டுகள் எனவும் அழைப்பர். கடந்த ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு மேலாக கல்வெட்டு ஆய்வாளர்களும், மொழியியல் அறிஞர்களும் இக்கல்வெட்டு பற்றி ஆய்வுகள் செய்து வந்தனர். அவர்களுள் திருவாளர்கள் கே.வி. சுப்பிரமணிய ஐயர், ஐராவதம் மகாதேவன், கே.ஜி. கிருஷ்ணன், டி.வி. மகாலிங்கம், சிவராமமூர்த்தி ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர். தமிழ்நாட்டின் குகைகளில் காணப்படும் பிராமிக் கல்வெட்டுகள் தமிழ்க் கல்வெட்டுகள் என்பதனை முதன் முதலில் கண்டு பிடித்து உலகிற்கு உணர்த்திய பெருமை காலஞ் சென்ற திரு. கே.வி. சுப்பிமணிய ஐயரையே சாரும். பின்னர் இக்கருத்து பிற ஆய்வாளர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. எனவே பிராமியை தமிழி எனறே குறிப்பிடலாம்.

திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள் இக்கல்வெட்டுகளை மீண்டும் நுண்ணிதின் ஆய்ந்து, பல விளக்கங்களைக் கூறியுள்ளார். பிராமி அல்லது தமிழி எழுத்தின் வளர்ச்சியை இன்றைய தமிழ் எழுத்து என்பதனை நாம் அறிய வேண்டும். இவை அசோகன் பிராமியைப் பெரிதும் ஒத்தவை. இரண்டு மொழிக்கும் உரிய பொது எழுத்துக்கள் ஒரே உருவத்தைப்பெற்றுள்ளன. அவ்வம் மொழிகளுக்குரிய சிறப்பெழுத்துக்கள் மட்டுமே உருவில் வேறுபட்டு அசோகனது காலத்துக் கல்வெட்டுகள் முதல் தான் இவ்வெழுத்துக்கள் வட

இந்தியாவில் காணப்படுகின்றன. ஆனால் தென்னிந்தியாவிலும் இலங்கை முதலாய் இடங்களிலும் அதற்கு முந்தைய நூற்றாண்டுகளிலேயே காணப்படுவதால் இவ்வெழுத்துக்களின் தோற்றம் தென்பகுதி என்பதுறுதி, ஜம்பைக் கல்வெட்டு அசோகன் கல்வெட்டிற்கு முற்பட்டது என்பது இங்கே நினைக்கத்தக்கது. இவை பண்டைய தமிழ் எழுத்துக்களே என்பதனை நாம் உறுதியாக நம்பலாம்.

தமிழகத்தின் பல பகுதிகளில் குறிப்பாக சமணர்கள் வாழ்ந்த மலைப் பகுதிகள், குகைத் தளங்கள் ஆகியவற்றில் இவை நிறைந்து காணப்படுகின்றன இவை அரச்சலூர் (பெரியார் மாவட்டம்) பிள்ளையார் பட்டி ( குன்றக்குடி அருகில்) திருநாதர் குன்று (செஞ்சி அருகே) புகளூர், ஐயர் மலை (கரூர் மாவட்டம்) திருப்பரங்குன்றம், ஜம்பை, மாங்குளம், கொங்கர் புளியங்குளம்ருங்காலக்குடி, திருவாதவூர், கீழவளவு, குன்றக்குடி மேட்டுப்பட்டி, வரிச்சியூர் மறுகால்தாலை அம்மன் கோயில்பட்டி மற்றும் பல இடங்களில் காணப்படுகின்றன. இவற்றுள் ஒரு சில கல்வெட்டுகள் பற்றிமட்டும் காண்போம்.

## அறச்சலூர் பிராமிக் கல்வெட்டுகள் :

பெரியார் மாவட்டத்தில் ஈரோட்டிலிருந்து காங்கயம் செல்லும் சாலையில் 12கி,மீ தொலைவில் அறச்சலூர் உள்ளது, இவ்வூருக்கு அருகில் நாகமலை உளது இம்மலையின் ஒருபுறத்தில் கீழ்க்காணும் கல்வெட்டுள்ளது.

'எழுத்துப் புணருத்தான் மணிய்
வண்ணக்கன் தேவன் சாத்தன்'

இதனை 'மனிய வண்ணக்கன்' என்றும் படிக்கலாம். இதன் பொருள் மணியைப் பரிசோதனை செய்யும் தேவன் சாத்தன் என்பதாகும்.

மணி என்பது உயர்ந்த ரக மணிகள். இவன் உயர்ரக முத்து, பவழம், ரத்தினம், பச்சைக்கல், வைரக்கல் முதலானவற்றை ஆய்வு செய்பவன்.

### பிள்ளையார் பட்டி :

இராமநாதபுரம் மாவட்டம் குன்றக்குடிக்கு அருகில் பிள்ளையார்பட்டி எனும் ஊர் உள்ளது. இவ்வூர்க்குடைவரைக் கோயிலில் கற்பக விநாயகர் அழகே உருவாக நிர்மாணிக்கப்பட்டுள்ளார். குகைக் கோயிலின் சுவரில் இரண்டு வரியிலான பிராமிக் கல்வெட்டுள்ளது. இக்கல்வெட்டை 'எருக் காட்டுருக் கோன் பெருந்தச்சன்' என்று படிக்கலாம். இதன் பொருள் ஏருக்காட்டுரு என்ற ஊரைச் சேர்ந்த பெருந்தச்சன் என்பதாகும்.

### திருநாதர் குன்று :

செஞ்சிக்கருகில் உள்ள சிங்கவரம் என்னும் ஊருக்கு அண்மையில் உள்ள திருநாதர் குன்றில் இப்பிராமிக் கல்வெட்டுள்ளது. சமண முனிவரான சந்திர நந்தி என்பார் உண்ணா நோன்பிருந்து, உயிர் துறந்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுள்ளது. நோற்றல் என்பது உண்ணா நோன்பு நோற்றலைக் குறிக்கும். இதோ அக்கல்வெட்டு.

'ஐம்பத் தேழுக
சனந் நோற்ற
சந்திர நந்தி
கிரிகரு நிசிதிகை.'

அடுத்து கரூர் மாவட்டம் கரூர்வட்டம் புகழூர்க் கல்வெட்டு, தமிழிக்கல்வெட்டு வரலாற்றல் சிறந்ததோர் இடத்தைப் பெற்றுள்ளது. இங்கு புகளூர்க் கல்வெட்டுகள் பற்றிக் காண்போம்.

புகளூர் கல்வெட்டுக்கள் :

1. மூதா அமண்ணன் யாற்றூர் செங்காயபன்....
கோ ஆ..... ல்லிம்பொறை மகன் பெருங்
கடுங்கோன் மகன் கடுங்கோன் ளங்கடுங்
கோ ளங்கோ ஆக அறுபித கல்.

2. மூதா அமண்ணன் யாற்றூர் செங்காயபன் கோ ஆதன்
செல்லிரும் பொறை மகன் பெருங் கடுங்கோன் மகன்
ளங் கடுங் கோ ளாங் கோ ஆகி அறுத்தகல்.

3. நல்லி பி ஊர் அ பிடந்தை மகள்
கீரன் கொற்ற
நல்பி ஊர் அ பிடன் குறும் மகள்
கீரந்நோறி செயிபித பளி
கரூஊர் பொன் வாணிகன்
நத்தி அதிட்டானம் (அத்தி என்றுவாசிப்பர்-சிலர்)

கருவூரிலிருந்து 20 கி.மீ. தொலையிவில் புகளூர் அமைந்து உள்ளது. புகளூரில் ஆறுநாட்டார்மலை என்ற சிறிய குன்று உள்ளது. அடிவாரத்தில் உள்ள ஊர் வேலாயுதம்பாளையம் என்று அழைக்கப்படுகிறது. மலைஉச்சிக்குச் செல்லும் வழியில் இரு இயற்கையான குகைத்தளங்கள் உள்ளன இவற்றில் சமண முனிவர்கள் தங்கிருந்ததற்கு அடையாளமாக கற்படுக்கைகள் காணப்படுகின்றன.

தென்புறக் குகைத்தளத்தில் உள்ள கல்வெட்டுகள் கருவூர் வரலாற்றுக்கு இன்றியமையாதவை.

சேரன் இளங்கடுங்கோ 'இளங்கோ' பட்டம் எய்திய போது, யாற்றூரைச் சார்ந்த செங்காரயபன் என்பவருக்கு உறைவிடம் கொடுத்ததை இரு கல்வெட்டுகள் குறிக்கின்றன.

இக்கல்வெட்டுகளில் சேர மன்னர்களுடைய மூன்று தலைமுறைகள் குறிக்கப்பட்டுள்ளமை சிறந்தவரலாற்றுச் செய்தியாகும். இந்த கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள கோஆதன் செல்லிரும் பொறை, செல்வக் கடுங்கோ வாழி ஆதன் ஆவான். பெருங் கடுங்கோ என்பவனே பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆவான் கோப்பெருஞ்சேரலிரும்பொறை, இளங்கடுங்கோ என்பவனே மருதம் பாடிய இளங்கடுங்கோ இவனே இளஞ்சேரல்லிரும்பொறை, புகளூர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள மூன்று அரசர்களும் பதிற்றுப்பத்து 7,8,9 ஆம் பத்துகளின் பாட்டுடைத்தலைவர்களாவர். பிடன, கீரன் என்று வரும் பெயர்கள் சங்க இலக்கியங்களில் வரும் பல பெயர்களை நினைவூட்டுகின்றன. மற்றொரு கல்வெட்டில் 'கருவூர் பொன்வாணிகன்' என்பவன் குறிக்கப்படுகின்றான.

கருவூருக்கு அருகிலேயே இக்கல்வெட்டுக்கள் காணப்படுவது மிகவும் சிறப்பாகும். கருவூர் வரலாற்றுக்குப் புகளூர்க் கல்வெட்டுக்கள் மிகவும் சிறப்பான ஆதாரமாக விளங்குகின்றன.

மீனாட்சிபுரம் (அரிட்டாப்பட்டி, மதுரை மாவட்டம்)

1. கணிய் நந்த ஸிரிய் இகுவ்அன் கே
   தம்மம் இத்தஅ நெடுஞ்செழியன் பணஅன்
   கடல்அன் வழுத்திய் கொட்டுபித்த அபளிஇய

2. கணிய் நந்த ஸிரிய்குஅன் தமம்
   இத நெடிஞ்சழியன்
   ஸாலகன் இளஞ்சடிகன் தந்தைய்
   சடிகன் செஇய பளிய

3. கணிஇ நத ஸிரிய் குவ
   வெள்அறைப் நிகமது காவிதிஇய
   கழிதிக அந்தைஅ ஸீதன்
   பிணஉ கொடுபிதோன்

4. சந்தரின் கொடுபிதோன்

5. வெள்அறை நிகமதோர் கொடிஓர்

இதனை மாங்குளம் கல்வெட்டுகள் எனவும் குறிப்பிடலாம் நெடுஞ்செழியன் என்பான் நந்தரிசியக்குவன் என்பவருக்குப் பள்ளியமைத்துக் கொடுத்தனை, முதல் கல்வெட்டு குறிப்பிடுகிறது. அதே சமண முனிவருக்கு நெடுஞ்செழியனின் சாலகன் இளஞ்சடிகனின் தந்தை சடிகன் என்பான் பள்ளி அமைத்துக் கொடுத்தை இரண்டாவது கல்வெட்டு குறிக்கிறது. அதே அழிதிக அந்தை என்பவரின் மகன் பிணவு என்பான் படுக்கை வெட்டிக் கொடுத்தைக் கூறுகிறது. அடுத்த கல்வெட்டு சந்தரிதன் என்பானும்வெள்ளறை நிகமத்தோரும் பள்ளியமைத்துக் கொடுத்தைக் குறிப்பிடுகின்றது. கி.மு. 3, 2 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இக்கல்வெட்டு பாண்டிய வேந்தன் நெடுசெழியனுடையதாகும்.

**விக்கிரமங்கலம் :**

1. அந்தைய் பிகன் மகன் வெஞ்சு தான

2. பெதலை கவிரன்

3. செங்குவிரன்

4. கவிராதன்

5. எம்ஊஊர் சதஅன்அ தான

மதுரைக்கு அருகில் உள்ள உண்டாங்கல்லு என்று பொதுமக்களால் அழைக்கப்படும் குன்றின் குகையில் இக்கல்வெட்டுளது. இதில் அந்தை பிகனின் மகன் செய்ததானம் குறிப்பிடப் பெறுகிறது. பெதலை குவிரன், செங்கு விரன், குவிராதன் என்பவை பெயர்கள். ஸ்தானம் என்பதன் திரிபே தானம் ஆகும்.

**சித்தன்னவாசல் :**

1. எருமி நாடு குமிழ்ஊர் பிறந்த
காவுடி ஈதேன்கு சிறுபோவில்
இளயர் செய்த அதிட்சுனம்

புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள சித்தன்னவாசல் மலையின் மறுபுறம் உள்ள 'ஏழடிப்பட்டம்' என அழைக்கப் பெறும் குகைத்தளத்தில், இக்கல்வெட்டுகள் உள்ளன. சமணமுனிவருக்கு படுக்கையின் பக்க எறுமை நாடான காவிதி ஈதேன் சிறுபோவில் செய்த தானத்தைக் குறிப்பது இக்கவெட்டு.

**மேட்டுப்பட்டி :**

1. அந்தை அரிய்தி
2. அந்தை இரவாதன்
3. மதிர அந்தை விஸுவன்
4. அந்தை செந்தஅ தான
5. சந்தந்தை சந்தன்
6. பதின்ஊர் அதை
7. குவிர அந்தை செய்அ தான
8. குவிர அந்தை வேள்அ தான
9. திடிஇள அதான

பேரனைக் கட்டுக்கு அருகில் அமைந்துள்ள மேட்டுப்பட்டிக்கு அருகில் சித்தர் மலை உள்ளது. இதன் மேல் உள்ள குகைத்தளத்தில இது வெட்டப்பட்டுள்ளன. இதுவும் தானத்தைக் குறிப்பனவாகும்.

**ஆனைமலை :**

1. "இவ குன்றத்து உறையுள் பா தந்தான் எரி
அரிதன் அத்து வாயி அரட்ட காயிபன்"
மதுரைக்கு அருகில் உள்ள இவகுன்றத்தில் (யானை மலையில்) இக்கல்வெட்டு உள்ளது. பா தந்தான் என்பது படுக்கை அமைத்துத் தந்தான் எனப்பொருள்படும்.

## தமிழி எழுத்திலிருந்து தமிழ் எழுத்து வளர்ந்த முறை :

| தமிழி | தமிழ் |
|---|---|
| + | க. |
| [illegible] | கா. |
| [illegible] | கே. |
| [illegible] | கோ. |

க என்பது + இது கா வாக மாறும் போது + இல் வலது புறம் மேல் பகுதியில் ஒரு படுக்கைக் கோடு போடுகிறோம் [illegible] இது ா வைக் குறிக்கிறது. கே எழுத்தை எழுத + இல் மேல்பகுதியில் இடது புறம் ஒரு படுக்கைக் கோடு [illegible] போடுகிறோம் இது ே குறியீட்டைக் குறிக்கிறது. கோ எழுத்தை எழுத + இன் மேல்புறம் வலது புறமும் இடது புறமும் படுக்கைக்கோடு போடுகிறோம் [illegible] இதில் ே குறியீட்டிற்கு இடதுபுறம் கோடும் ா குறியீட்டிற்கு வலது புறம் கோடும் சேர்க்கிறோம், க எழுத்து + மட்டும் மாறாது உள்ளது. இம்முறையில் தமிழியிலிருந்து தமிழ் எழுத்துக்கள் கி, கீ, கு, போன்றவையும் வளர்ந்தன.

**வட்டெழுத்து :**

வட்ட வடிவமாக எழுதப்பட்ட எழுத்து வட்டெழுத்தாகும். தமிழகத்தில் தமிழ் மொழியை எழுதப் பயன்படுத்தப்பட்ட

எழுத்துக்களுள் வட்டெழுத்தும் ஒன்றாகும். இது வட்டம் என்றும் அக்காலத்தில் வழங்கப்பட்டது என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகளால் அறியலாம். 'தெக்கன் மலையாளம்' 'நாநா மோன' போன்ற பெயர்களாலும் வட்டெழுத்து அழைக்கப்பட்டது.

இவை பாண்டிய நாட்டில் மட்டும் பெருமளவில் காணப்பட்ட போதிலும், தமிழ்நாட்டின் பிற மாவட்டங்களிலும் காணப்படுகின்றன. பாண்டிய நாட்டில் இவ்வெழுத்துக்கள் எட்டாம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. பத்தாம் நூற்றாண்டு வரை தனியாட்சி செலுத்தி வந்தன. சேரநாட்டிலும் இவை மலையாள எழுத்து வளரத் தொடங்கிய பின்னருங்கூட வட்டெழுத்து அங்கு புழக்கத்தில் இருந்தமை இங்கு குறிப்பிடத்தக்கது. சிலப்பதிகாரத்தில் குறிக்கப் பெறும்'கண்ணெழுத்து' இதுவே எனக்கருதுவாரும் உண்டு

வட்டெழுத்தின் தோற்றம் குறித்து இதுகாறும் ஒருமித்த கருத்து உருவாகவில்லை. பிராம்மி எழுத்திலிருந்து தான் வட்டெழுத்தும் வளர்ச்சியடைந்தது என்று டி.ஏ. கோபிநாத ராவ் அவர்கள் குறிப்பிடுவார். 'கரோஷ்டி' எழுத்திலிருந்துதான் வட்டெழுத்து உருவானதென்று பண்டாரகர் அரிபிரசாத் சாஸ்திரி கருதுவார். இவரது கருத்து பெருந்தாக்கூற்று பண்டாரகர் பர்னல் என்னும் அறிஞர் பொனிசியன் எழுத்திலிருந்துதான் இவ்வெழுத்து வளர்ச்சியடைந்திருத்தல் வேண்டுமென்றும் இவை அசோகன் பிராமியினின்றும் வேறானவை என்றும் கருத்துத் தெரிவித்துள்ளார். ”வடமொழி தமிழகத்தில் பரவுவதற்கு முன்னரே வட்டெழுத்து பயன்முறையில் இருந்துள்ளதால், வட்டெழுத்து பிராமியிலிருந்துதான் வளர்ந்திருத்தல் வேண்டுமென்பது ஒப்புக் கொள்ள முடியாத ஒன்று” என்றும் இவர் ஆணித்தரமாகக் கூறினார்.

பண்டாரகர் ப்யூலர் அவர்கள் வட்டெழுத்து தமிழின் ஒரு மாறுப்பட்ட வடிவமே என்றும் அது மராட்டியர் எவ்வாறு மோடி எழுத்துக்களைப் பயன்படுத்தினரோ அது போன்று வணிகர் மட்டுமே பயன்படுத்தும் எழுத்தாக அது இருந்தது என்று கருதுகிறார்.

கல்வெட்டறிஞர் நடன காசிநாதன் அவர்கள் எல்லாவற்றிற்கும் மேலாகத் தமிழிக் கல்வெட்டுகளே தமிழின் முந்தைய வடிவம் என்று கருதப்படும் இந்நாளில் வட்டெழுத்தும் தமிழினுடைய ஒரு காலகட்டப் பகுதியின்(Periodical) வளர்ச்சியே என்று கொள்ள வேண்டியுள்ளது" எனப்பொருத்தமாகக் கூறியுள்ளார்.

பண்டைய தமிழி எழுத்திலிருந்துதான் வட்டெழுத்து வளர்ந்தது என்ற டி.ஏ. கோபிநாதராவ் அவர்களது கருத்தையும் இணைத்துப் பார்க்குங்கால் தமிழ்க் கல்வெட்டிலிருந்துதான் வட்டெழுத்து வளர்ந்தது எனும் பேருண்மை புலனாகும். தமிழகத்தில் கிடைத்துள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகளை நுண்ணிதின் ஆய்ந்து பார்க்ங்கால் இம்முடிவே சரியானது என்பதும் தெளிவாகிறது.

தமிழகத்தில் கிடைத்த வட்டெழுத்துக் கல்வெட்டுகளுள் மிகப் பழமையானது தருமபுரி மாவட்டம் இருளப்பட்டியில் கிடைத்த நடுகல் கல்வெட்டாகும். இது கி.பி. 5 ஆம் நூற்றாண்டினதாகும் செஞ்சிக்கு அருகில் உள்ள திருநாதர்குன்று வட்டெழுத்துக் கல்வெட்டும் இதே காலகட்டத்தைச் சேர்ந்ததுதான். அடுத்து தமிழ்நாடு தொல்பொருள்துறை வட ஆர்க்காடு மாவட்டத்தில் நடுகற்கள் பலவற்றைப் படியெடுத்துள்ளது. இவையாவும் கி.பி. 6ஆம் நூற்றாண்டிலிருந்து 9ஆம் நூற்றாண்டிற்கு உட்பட்ட வட்டெழுத்துக் கல்வெட்டுகளே ஆகும்.

அண்மைக்காலத்திலும் வேறு சில பழமையான வட்டெழுத்துக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவை

வட்டெழுத்தும் தமிழும் கலந்து எழுதப்பட்டவை. எனவே தொடக்க காலத்தில் கல்வெட்டுகள் வட்டெழுத்தும் தமிழும் கலந்து எழுதப்படுள்ளமை புலனாகும். எடுத்துக்காட்டாக சேலம்மாவட்டம் அனுமந்தபுரம் ஒட்டப்பட்டி, கோலார் மாவட்டத்திலுள்ள எபினி ஆகிய இடங்களில் காணப்படும் வெட்டெழுத்துக் கல்வெட்டுகளில் தமிழ் எழுத்துக்களும் இடம் பெறுகின்றன. அடுத்து வடஆர்க்காடு மாவட்டம் கீழ்முட்டுக்கூர் குளிடிக்கி ஆகிய இடங்களில் உள்ள தமிழ்க்கல்வெட்டக்களில் வட்டெழுத்தும் இடம் பெற்றுள்ளன. இருளப்பட்டி , அறச்சலூர், திருநாதர்குன்று, பிள்ளையார்பட்டி, திருக்குழுக்குன்றம் முதலான இடங்களில் காணப்படும் கல்வெட்டுகளும் தமிழ், வட்டெழுத்து கலந்த கலப்படக்கல்வெட்டுகளே என்பதும் இங்கும் நினைவு கூறத்தக்கது

## .வட்டெழுத்தின் தோற்றம் :

தொல்லியல் அறிஞர் நாகசாமி அவர்கள் வட்டெழுத்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து தமிழகத்தில் வழக்கில் வந்தது எனக் கணித்துள்ளார். எனவே வட்டெழுத்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் தோன்றியது என்பது பெறப்படுகிறது.

வட்டெழுத்துக்கள் பாண்டிய நாட்டில் சிறப்புற்று விளங்கியதாலும், கேரளப் பகுதிகளில் அண்மைக்காலம் வரை நிலைபெற்றிருந்ததாலும் அறிஞர் சிலர் இவ்வெழுத்துக்கள் தமிழகத்தின் தென் பகுதியில்தான் பெருவழக்காக இருந்தது எனவும் கருதினர். இக்கருத்து பிழைபட்டது என்பதனை அண்மைக்கால ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

தமிழகத்தின் தொன்மையான வட்டெழுத்துக் கல்வெட்டுகள் அனைத்தும் தமிழகத்தின் வடபகுயில் தான் படியெடுக்கப்படுள்ளன. வடஆர்க்காடு, தென்ஆர்க்காடு, செங்கல்பட்டு, தருமபுரி

கோயம்புத்தூர் மாவட்டங்களில் தான் இவை பரவலாகப் பயன்படுத்தப்பட்டன. இப்பகுதிகள், பண்டு கொங்குநாடு, கங்கபாடி, பெரும் பாணப்பாடி, தொண்டை நாடு எனும் பெயரால் அழைக்கப்பட்டன.

பல்லவர்கள் கி.பி. 6 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 8ஆம் நூற்றாண்டு வரையில் தாம் வெளியிட்ட பல கல்வெட்டுகளை வட்டெழுத்துக்களில் எழுதியுள்ளனர். பாண்டிய நாட்டில் வட்டெழுத்துக்கல்கல்வெட்டுகள் கி.பி. 7ஆம்நூற்றாண்டிலிருந்தே கிடைக்கின்றன. வட்டெழுத்து பாண்டிய வேந்தரது அரச ஆதரவைப் பெற்றதால்தான் கி.பி. 8 மற்றும் 9 ஆம் நூற்றாண்டுகளில் வெளியிடப்பட்ட அவர்களது செப்பேடுகள் வட்டெழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. இதனால் கல்வெட்டுகளில் மட்டுமின்றி செப்பேடுகளிலும் வட்டெழுத்து பயன்பட்டுள்ளமை புலனாகும். பாண்டிய நாட்டிலும் கொங்கு நாட்டிலும் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரை வட்டெழுத்துப்பயன் படுத்தப்பட்டது.

பல்லவர் காலத்தில் வட்டெழுத்து கல்வெட்டுகளில் மட்டுமே காணப்படுகின்றன. ஆனால் செப்பேகளில் வட்டெழுத்தைப் பயன் படுத்தவில்லை. சோழ மண்டலத்திலோ வட்டெழுத்துக்கள் செல்வாக்குப் பெறவில்லை. இவர்கள் தமிழையே கல்வெட்டு எழுதப் பயன்படுத்தினர், கொங்கு நாட்டை ஆண்ட கொங்குச் சோழர் வட்டெழுத்தைப் பரவலாகப் பயன்படுத்தினர்.

கங்கர், பாணர் முதலான அரசகுலத்தினர் தாம் ஆட்சி புரிந்த தொண்டை மண்டலப்பகுதிகளில் கி.பி 8 ஆம் நூற்றாண்டு வரை வட்டெழுத்தையே பயன்படுத்தினர். பின்னர் இது வழக்கொழிந்தது, கேரளத்தில் வட்டெழுத்து வளர்ந்து,

கிரந்தத்துடன் இணைந்து, இன்றைய மலையாள எழுத்தாக மலர்ந்து மணம் பரப்புகின்றது.

வட்டெழுத்துக்கள் பிற்காலத்தில் செப்பேடுகள் எழுதவும் பயன்பட்டன. எடுத்துக்காட்டாக கி.பி. 17ஆம் நூற்றாண்டில் உருவான பாழியம் செப்பேட்டையும், கி.பி. 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மின்சிறை மடம் செப்பேட்டையும் சுட்டலாம்

இவ்வாறு வட்டெழுத்துக்கள் கி.பி. 3 ஆம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரை பல்லவ, பாண்டிய நாடுகளில் வழங்கி வழக்கொழிந்தது, ஆனால் கேரளாவில் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு வரைத் தொடர்த்து என்பது புலனாகும்.

### வட்டெழுத்தின் வளரச்சி :

வட்டெழுத்து வளர்ச்சியில் மூன்று படிநிலைகள் உள்ளதாக அறிகிறோம

(1) கி பி, 300 தொடங்கி கி.பி. 950 வரையில் எழுதப்பட்ட வட்டெழுத்துக் கல்வெட்டுகள் முதல் நிலையினதாகக் கொள்ளலாம்.

(2) கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிமுதல் (950) கி.பி. 14ஆம் நூற்றாண்டு (1350) வரையிலான காலம் இரண்டாவது நிலையைச் சுட்டுகின்றது

(3) கி.பி. 14 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட பகுதி மூன்றாவது அல்லது இறுதிக்கட்ட நிலையாகும்.

இருளப்பட்டி, திருநாதர்குன்று, ஆனைமலை, ஐவர்மலை, திருச்செந்தூர் கல்வெட்டுகளும் சின்னமனூர் (பெரிய) செப்பேடுகள் வேள்விக்குடிச் செப்பேடுகள், சென்னை மியூசியம் செப்பேடுகள் ஆகியவை முதல் நிலைக்கு எடுத்துக்காட்டுகள் ஆகும். இரண்டாம்

நிலைக்கு பராந்தக சோழனின் ஆணமலைக் கல்வெட்டையும் உதய மார்த்தாண்ட வர்மனின் கொல்லூர் மடம் செப்பேட்டையும் (12ஆம் நூற்றாண்டு) வேணாடு பாஸ்கர ரவிவர்மனின் திருக்கடித்தானம் கல்வெட்டையும் (கி.பி. 11ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி) எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

மூன்றாவது நிலை குறிக்கும் காலக் கட்டத்தில் எழுதப்பட்டவற்றுள் கல்பாத்தி கல்வெட்டையும் (கி.பி. 15ஆம் நூற்றாண்டு) பாழியம் செப்பேட்டையும் (கி.பி. 17ஆம் நூற்றாண்டு) மின்சிறை மடம் செப்பேட்டையும் (கி.பி. 18ஆம் நூற்றாண்டு) குறிப்பிடலாம். கி.பி. 18ஆம் நூற்றாண்டிற்குப் பின் வட்டெழுத்து செல்வாக்கு குறைந்தது.

# பிற்சேர்க்கை

## அ. பழையகற்காலக் கருவிகள் கண்டுபிடிப்பு

| செங்கற்பட்டு மாவட்டம் | | குறிப்பு |
|---|---|---|
| 1) அத்திரம்பாக்கம் | : | இராபட் புரூஸ் புட் பல பழங்கற்காலக் கருவிகளைக் கண்டுபிடித்தார். பின்னர் VD. கிருஷ்ணசாமி, பேட்டர்சன், H D.சங்காலியா ஆகியோர் மறுஆய்வு செய்து கற்காலக் கருவிகளின் தொழிற் கூடத்தைக் கண்டறிந்தனர். |
| 2) குடியம் | : | பெருமளவில் பழங்கற்காலக்கருவிகள் கண்டெடுக்கப்பட்டன. 1962-63 ; 1963 - 64 ஆண்டுகளில் அகழாய்வுகள். |
| 3) நெய்வேலி | : | பழங்கற்கால இடைக்கற்காலக்கற் கருவிகள் கண்டெடுக்கப்பட்டன. |
| 4) பூண்டி | | இடைப்பழங்கற்காலக் கருவிகள்; பிந்திய அச்சூலியன் வகைக் கற்கருவிகளும் கிடைத்தன. |
| 5) வடமதுரை | : | பழங்கற்கால மனிதனின் குடியிருப்பு. |

## ஆ. புதிய கற்கலாக் கருவிகள் கண்டெடுக்கப்பட்ட இடங்கள்:

| தர்மபுரி மாவட்டம் | | குறிப்பு |
|---|---|---|
| 1) பர்கூர் | : | வழுவழுப்பானகைக்கோடரிகள் உற்பத்தி செய்யும் பட்டரை |
| 2) முளவி | : | வழுவழுப்பான கைக்கோடரிகள் உற்பத்தி செய்யும் பட்டரை |

| | | |
|---|---|---|
| 3) | கப்பலவாடி | : வழவழப்பான கைக்கோடரிகளிபட்டரை |
| 4) | மல்லப்பாடி | : பழங்கருவிகள் சென்னை பல்கலைக்கழக அருங்காட்சியகத்தில் உள்ளன. |
| 5) | புதுரெட்டியூர் | : சேலம் அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டுகின்றன. |
| 6) | கடத்தூர் | : சேலம் அருங்காட்சியகத்திலும் ஈரோடு கலைமகள் அருங்காட்சியகத்திலும் உள. |
| 7) | வற்றல் மலை | : சேலம் அருங் காட்சியகத்தில் உள்ளன. |
| 8) | வேடர் தட்டக்கல் | : சேலம் அருங் காட்சியகத்தில் உள்ளன. |
| 9) | தோக்ரப் பள்ளி | : சேலம் அருங் காட்சியகத்தில் உள்ளன. |
| 10) | முள்ளிக்காடு | : சேலம் அருங் காட்சியகத்தில் உள்ளன. |
| 11) | தைல் மலை | : சேலம் அருங் காட்சியகத்தில் உள்ளன. |
| 12) | சேனங் காடு | : சேலம் அருங் காட்சியகத்தில் உள்ளன. |
| 13) | பன்னி மடுவு | : சேலம் அருங் காட்சியகத்தில் உள்ளன. |
| 14) | ஒசூர் | : கலைமகள் (ஈரோடு) அருங்காட்சியகத்தில் உள்ளன. |
| 15) | கொல்லப் பள்ளி | : கலைமகள் (ஈரோடு) அருங்காட்சியகத்தில் உள்ளன. |
| 16) | டோகரப் பள்ளி | : கலைமகள் (ஈரோடு) அருங்காட்சியகத்தில் உள்ளன. |

**சேலம் மாவட்டம் :**

17) மோகனூர் :

18) சேர்வராயன்மலை :

**வடஆர்க்காடு மாவட்டம்**

19) பையம்பள்ளி : S.R. ராவ் இங்கு அகழாய்வு செய்தார் புதியகற்கால மக்கள் குடியிருப்பு அவரங்கபாத் அருங்காட்சியகத்தில் உள்ளன.

20) தலத்தப்ப மலை :

21) திருமலை : சென்னைப் பல்கலைக்கழகம் அகழாய்வு செய்தது, கருவிகள் சென்னைப்பல் கலைக்கழக பழங்கால இந்திய வரலாறு அருங்காட்சியகத்தில் உள.

22)' கில்லேரிமலை : சென்னைப் பல்கலைக்கழகம் அகழாய்வு செய்தது, கருவிகள் சென்னைப்பல் கலைக்கழக பழங்கால இந்திய வரலாறு அருங்காட்சியகத்தில் உள.

23) அப்புக்குல்லு : சென்னைப் பல்கலைக்கழகம் அகழாய்வு செய்தது, கருவிகள் சென்னைப்பல் கலைக்கழக பழங்கால இந்திய வரலாறு அருங்காட்சியகத்தில் உள.

24) சந்திராபுரம் (திருப்பத்தூர் Tk) : சென்னைப் பல்கலைக்கழகம் அகழாய்வு செய்தது, கருவிகள் சென்னைப்பல் கலைக்கழக பழங்கால இந்திய வரலாறு இருங்காட்சியகத்தில் உள.

| | | |
|---|---|---|
| 25) சியமங்கலம் | : | சென்னைப் பல்கலைக்கழகம் அகழாய்வு செய்தது, கருவிகள் சென்னைப்பல் கலைக்கழக பழங்கால இந்திய வரலாறு அருங்காட்சியகத்தில் உள. |
| 26) துல்லட்(Tullet) (வேலூர் அருகில்) | : | சென்னைப் பல்கலைக்கழகம் அகழாய்வு செய்தது, கருவிகள் சென்னைப்பல் கலைக்கழக பழங்கால இந்திய வரலாறு இருங்காட்சியகத்தில் உள. |

## தென் ஆர்க்காடு மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 27) செங்கமேடு | : | |
| 28) நல்லூர் (செங்கற்பட்டு மாவட்டம்) | : | சென்னைப் பல்கலைக் கழக அருங்காட்சியகத்தில் உள. |
| 29) வட மதுரை | : | |

## திருச்சிராப்பள்ளி மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 30) ஒட்டக் கோயில் | : | |
| 31) நின்னியூர் | : | |

## பெரியார் மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 32) கொடுமணல் | : | சில பழங்கருவிகள் ஈரோடு கலைமகள் அருங்காட்சியகத்தில் உள. |
| 33) கத்தாங்கன்னி | : | |
| 34) சர்க்கார் சாமக்குளம் | | |
| 35) புஷ்பத்தூர் | : | |

36) முட்டம் (வெள்ளியங்கிரி : 12 பழங்கருவிகள் ஈரோடு கலைமகள் அருங்காட்சியகத்தில் பாதுக்கப்படு கின்றன. மலையடி வாரம்)

**மதுரை மாவட்டம் :**

37) கருப்பண்ணசமி பொட்டல் (பழங்காணத்தும்) : மதுரை திருமலை நாயக்கர் மகால் அருங்காட்சியகத்தில் வைக்கப்பபட்டுள்ளன.

38) துவரிமான்

39) பெரிய குளம்

40) தேனி

41) சமயநல்லூர்

42) பெருமாள்மலை

43) கருவேலம்பட்டி

44) கோடங்கிப்பட்டி

45) கொல்லம்பட்டரை

**இராமநாதபுரம் மாவட்டம் :**

46) திருப்பத்தூர்

47) மானா மதுரை

**திருநெல்வேலி மாவட்டம் :**

48) செய்தங்க நல்லூர்

49) கொற்கை

50) சாயர்புரம்

# இ. தமிழ்நாட்டில் அகழாய்வு செய்யப்பட்ட இடங்களும் அவை உணர்த்தும் பண்பாடுகளும்

அ) பழைய கற்காலப் பண்பாட்டை வெளிப்படுத்தும் அகழாய்வுகள்:

செங்கற்பட்டு மாவட்டத்தில்

1. அத்திரம் பாக்கம் 2. நெய்வேலி 3. குடியம்
4. வடமதுரை 5. பூண்டி

ஆ) இடைக்கற்காலப் பண்பாட்டை வெளிப்படுத்துபவை :

6. திருத்தங்கால் (விருதுநகர் மாவட்டம்)
7. டி. கல்லுப்பட்டி (மதுரை மாவட்டம்)

இ) புதிய கற்காலப் பண்பாட்டை வெளிப்படுத்துபவை :

8. தொகரப்பள்ளி (தருமபுரி மாவட்டத்தில்)
9. தைலமலை
10. முள்ளிக்காடு (வட ஆர்க்காடுமாவட்டதில்)
11. பையம்பள்ளி 12. முள்ளிக்காடு

ஈ) இரும்புக்காலப் பண்பாட்டை உணர்ந்துபவை :

13. ஒடுகத்தூர் 14. கம்பர்மேடு
15. கல்லேரிமலை 16. பெரும்பேர்
17. மல்லப்பாடி 18 மேல் சாத்தமங்கலம்
19. அமிர்தமங்கலம் 20. அனுப்பானடி
21. ஆரோவில் 22. ஆனைமலை
23. கடமலைப்புத்தூர் 24. கடையநல்லூர்
25. கலையபட்டி 26. களக்குடிபட்டி
27. கனராபாளையம் 28. கணியாம்பூண்டி

29. கீழ்நத்தம்
30. கீழ்ப்பாக்கம்
31. கொல்லூர்
32. கோரிமேடு
33. கோவலன் பொட்டல்
34. சானூர்
35. சித்தன்னவாசல்
36. சிறுமுகை
37. சூலூர்
38. செட்டியப்பாளையம்
39 சோத்துக்கேணி
40. நத்தமேடு
41 நல்லம்பட்டி
42. நாட்டுக்கல்பாளையம்
43 நிச்சாம்பாளையம்
44. தாடம்பட்டி
45. திருக்கட்டளை
46. திருத்து
47. திருப்பூர்
48. திருவக்கரை
49. துவரைமான்
50. தொடையூர்
51. பல்லாவரம்
52. பழநிமலை
53. பறவை
54. புல்வயல்
55. பெருமாள் மலை
56. பேரூர்
57. மலையாம்பட்டு
58, முத்தராபாளையம்
59. மோட்டூர்
60. வரிகல்
61. ஆதிச்சநல்லூர்
62. காவேரிப்பூம்பட்டினம்
63. குன்னத்தூர்
64. கொடுமணல்
65. கொற்கை

உ) வரலாற்றுத் தொடக்க காலப்பண்பாட்டை உணர்த்துபவை

66 அதியமான் கோட்டை
67 அரிக்கமேடு
68. அழகரை
69 அழகன் குளம்
70. உறையூர்
71. கரூர்
72. காஞ்சீபுரம்
73 காரைக்காடு
74. குட்டூர்
75 குடிகாடு
76. செங்கமேடு
77 திருக்காம்புலியூர்
78. போளுவாம்பட்டி
79 வல்லம்

80. வசுவசமுத்திரம் 81. சேந்தமங்கலம்
82. திருக்கோயிலூர் 83. திருவாமாத்தூர்
84. பழையாறை 85. மாமல்லபுரம்
86, நங்கநல்லூர்

ஊ) இடைக்காலப்பண்பாட்டை உணர்த்துபவை :

87, கங்கைகொண்ட சோழபுரம்88 உக்கிரன் கோட்டை
89. தாராசுரம் 90. தொண்டி
91. பழைய காயல் 92. குறும்பன் மேடு
93. சமயபுரம் 94. பெரியப்பட்டிணம்
95. கண்ணனூர் 96. படைவீடு
97. செஞ்சி 98. பாஞ்சாலங்

குறிச்சிநன்றி-தமிழ்நாட்டுத் தொல்லியல் ஆய்வுகள்
(சு. இராசவேலு, கோ. திரு மூர்த்தி)

# ஈ. சிந்துவெளி அகழாய்வுக்குறிப்புகல்

## முன்னுரை :

உலக நாகரிங்க்ளுள் தொன்மையும் சிறப்பும் மிக்கது சிந்து வெளிநாகரிகம் இந்நாகரிகம் சிந்து படுகையில் மட்டுமின்றி கங்கைச் சமவெளியின் சில பகுதிகளிலும், சிந்து , பஞ்சாப், கத்தியவார், வடமேற்கு எல்லைப்புறம் - முதலான பகுதிகளிலும் பரவியிருந்து சரஸ்வதி நதி தீரத்திலும் இந்நாகரிகம் நிலவியதால், இது சரஸ்வதி நதிநாகரிகம் எனவும் அழைக்கப்படுகிறது. பண்டிதநேரு அவர்கள், சிந்து வெளி நாகரிகம் இந்தியா முழுவதிலும் பரவியிருந்தது என்று குறிப்பிட்டமை இங்கே நினைவு கூர்தற்கு உரியது.

## அகழாய்வுகள் :

மொஹஞ்சதாரோ, ஹாரப்பா, சன்குதாரோ, சாசோகோதிரே, தகஞ்சதாரோ, லோத்தல், கலிபங்கன், கோட்சி, மிட்டதல், ரஜோ- தேரோ பைஜோ-தோரோ, பண்டிவாஹி, உலோகுஞ்சதாரோ, நிகாங்கான், சக்பூர் பானிசியால், அம்ரிகோட்லா, தானே புலக்கானம்- முதலான இடங்களில் மேற் கொள்ளப்பட்ட அகழாய்வுகள் இந்நாகரிகத்தின் சிறப்பினை உணர்த்ததுகின்றன. இந்தியாவில் மட்டுமின்றி, பாகிஸ்தான், பலுசிஸ்தான், ஆப்கானிஸ்தான் பகுதிகளிலும் - இந்நாகரிகத்தின் கூறுபாடுகள் காணப்படுவதனை அகழாய்வுகள் மெய்ப்பிக்கின்றன. இதுகாறும் பாகிஸ்தானில் 1200 வாழ்விடங்களும் (Habitationsites) இந்தியாவில் 800 வாழ்விடங்களும் சிந்துவெளி நாகரிகக கூறுபாடுகளைக் கொண்டிருப்பாதாகக் கண்டறியப்பட்டுள்ளன.

அண்மைக்காலத்தில் ஆப்கானிஸ்தானத்தின் எல்லையில் சொர்துகை என்ற இடத்தில் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது

இதுவே சிந்துவெளி நாகரிகத்தின் வடகோடி எல்லையாகக் (Out post) கருதப்படுகிறது. குஜராத் மாநிலத்தில் டைமாபாத், கட்ச் பகுதியில் தோலவீரா ஆகிய வாழ்விடங்களில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. துவாரகையில் மேற்கொள்ளப்பட்ட ஆழ்கடல் ஆய்வில் சிந்துவெளி நாகரிகச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டு உள்ளன. தற்போது பாகிஸ்தானில் மெக்ரான் என்ற இடத்திலும் ஆழ்கடல் ஆய்வு நடைபெறுகிறது.

சிந்து வெளி நாகரிகம் கிழக்கு மேற்காக 1100 கி.மீ. தொலைவும் வடக்கு தெற்காக 1500 கி.மீ. தொலைவும் பரவியிருந்தது. 1995இல் அரியான மாநிலத்தில் உள்ள குனல் (Kunal) என்னுமிடத்தில், ஹரப்பன் நாகரிகத்திற்கு முற்பட்ட நாகரிகக் கூறுபாடுகள் கொண்ட வாழ்விடம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

சர். ஜான்மார்ஷல், ஆர்.டி. பானார்ஜி, ராவ்பகதூர் தயாரம் சயானி, ஹிராஸ் பாதிரியார், கால்டுவெல், மார்டிமர் வீலர், சி.ஏஸ். பாப்ரிஜராவதம், மகாதேவன், மாக்கே, S அஸ்காார்பா் போலா, அஜாய்மித்ரா சாஸ்திரி, ஆராவமுதன் பைலி, Dr. பிரான்நாத், Dr வேடல், B.B. லால், S. கோஸ் கென்னியி ராஸ், G.R. ஹண்டர், S. லாங்டன்,yu V. நோரோசோவ், S.R. ராவ், சங்கர் ஹஜ்ரா, G. பிக்கோலி W. வான் ஹெரஸ்னி, மெரிக்கி, E. வால் சாக், N. கெரோங், A. கொண்ரோடோங், ஹெவ்சி மற்றும் பின்லாந்து, ரசியா, சீன நாட்டு அறிஞர்கள் முதலானோர் இந்நாகரிகம் பற்றி ஆய்ந்துள்ளனர் இங்கு தோண்டி எடுக்கப்பட்டுள்ள 4000 முத்திரையில் காணப்படும் எழுத்துக்கள் எம் மொழியைச் சார்ந்தவை என்பது இன்னும் உறுதி செய்யப் பெறவில்லை. உறுதி செய்யப்பெற்றால் இந்நாகரிகத்தின் சொந்தக்காரர் யார் என்பது தெளிவுபெறும்.

சிந்துவெளி நாகரிகத்தினை உருவாக்கிய மக்கள் யாவர்? என்பது குறித்து பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. திராவிடர். ஆரியர், முண்டா - ஆகியோருள் ஒருவரே இதற்குச் சொந்தக்காரர்களாக இருத்தல் வேண்டும் திராவிட மரபில் தோன்றிய குடித்தலைவர்களே இதனை உருவாக்கினர் என நம்ப இடமுண்டு.

சிந்துவெளி ஆய்வில் படைவீரர்கள் இருந்தற்கான சான்றுகள் குறைவாகவே உள்ளன. இவர்களிடம் படைகள் இருந்தாகத் தெரியவில்லை. எனவே அன்றைய அரசு பேரரசாக இல்லாமல்,நிலையிலேயே சிற்றரசு (Chiefclom) இருந்தது என்றும், இச்சிற்றறசுகள் தமக்குள் போரின்றி சமாதானத்துடன் வாழ்ந்தன என்றும், கருதலாம். இவர்கள் மெஸபடோமியா சுமேரியா, எகிப்து நாகரிகத்துடன் தொடர்பு கொண்டிருந்தனர்; அயல் நாடுகளுடன் வாணிபம் புரிந்தனர். இவர்களது காலம் கி.மு. 2500க்கும் 1500க்கும் இடைப்பட்டது ரொமிலாதாப்பர் அவர்கள் இது திராவிடர்களுடையது என்று அண்மையில் கருத்துத் தெரிவித்துள்ளார் செரீன்ரத்னாகர் எனும் பெண்மணி சிந்துவெளி நாகரீகம் பற்றி சிறந்ததோர் நூல் ஒன்றினை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். இதில் சிந்து வெளி நாகரிகம் பற்றிய ஆய்வுமுடிவுடன் கூறப்பட்டுள்ளன.

## சங்கச் சேரர் காசுகள்









## சங்கச் சோழர்காசுகள்









## சங்ககாலப் பாண்டியர் காசுகள்





பல்லவர் காசுகள்





## பாண்டியர்

## பல்லவர் காசுகள்





பல்லவர் காசுகள்





ஸ்ரீநிதி - கிரந்தம்





வமை - தமிழ்





அலப்த்த - கிரந்தம்





## ஆசிரியரின் பிற நூல்கள்

முதலாம் இராசேந்திர சோழன்

பாண்டியர் வரலாறு - முதல்பாகம்

இரஷ்ய வரலாறு

தமிழக வரலாற்றில் புதியஒளி

ஞானவள்ளல் திருப்பதிசுவாமிகள்

கருவூரார் வரலாறு

சுற்றுலாவியல்

தமிழ்நாட்டுச் சுற்றுலா மையங்கள்

வேட்டுவர் வரலாறு

இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையன்

தாந்தோன்றிமலைத் தலவரலாறு

கருவூரும் கன்னித்தமிழும்